திலமதுவா னெல்லெலவைநீ வாரகிறை சாலித் திரள்வகையக் கதைசாமை
தினைமூங்கி லரிசி, யிலகுமவல் சத்துமா மூர்க்கமா மாட மிராசமா டஞ்சண
கங கோதுமையா டகமுர், குலவுபுறுதா னியவகைபல் கரும்புசருக் கரையின்
குளநீமிலாற் பல்வகழுநீர் குறுதாதி மூல், நலகருணை பல்வள்ளி சகுடாதி
பூலா நறுநகிழுநகு முதலான கிழங்கின்வகை யெல்லாம். (௯௯)

மாதுளைசா மககமரம் பாதிரியான்றுன் றிறுமபல் வகையாநறுந கனிகண்
முதிர் வருக்கைநறுந கனிகள், சூதநறுந கனிகள்கொடி முந்திரிகற் சூரஞ்
சுவணலிகு சாதிவகை தாயபச கண்ட, மோதகநற் பாகநூற் புலவர்நுனித்
தோர்நதோர்ந் துஞற்றுவபல் வருக்கவகை யுலப்பிலன வெல்லா, மோதகமா
டாபூபஞ் சூபபூ ரணமே முதிர்சுவைநா ளுங்கோணஞ் சட்குலிமே *மூர்க்கம்.

பாயசமெள் ளுண்டைமஞ்ஞே காமெனாலைய திரட்டுப் பாணிறைசந் திராபூபங
களுபூப முசலா, மேயவளப் பரும்வகைய பண்ணியங்க ளெல்லாம் வெட்டி
வே ரிலாமிச்சம் வேர்பனிநீர் புழுகு, தூயசுகோ ரோசனைதுங குமப்பூக்கத
தூரி தூநறுங்கர்ப் பூராதி கத்தூரி மஞ்சள், பாயநறுங குங்குலியஞ் சடா
மஞ்சி மட்டிப் பால்கோட்ட நெரியரிசிப் பான்முநநீர்ப் பசகை. (௱)

வலநறுஞ் சாதிக்காய பத்திரிதக் கோலமிலவங்கம் வான்மிளகு முதல்வாச
மெல்லாஞ், சாலெறைறை தாம்பூல முகவாசஞ் சிந்திக் தண்கொடிவெற் றிலைக்
கொடிமுன் னுயநறுங கொடிக, ணீலமலர் கல்லாரந் துவயபது மாதி நீர்ப்பூ
மந் தாம்பா டலநகன்னி காரங், கோலநறும் புன்னுகம் பாரிசா தப்பூங்
கொன்றை†பஞ் செருந்தியகிழ் கூவிளஞ்சண் பகமே. (௱௧)

பன்னிதா மடஞ்சுவே தார்க்கநமே தகைதண் பலாசுகுரா வடம்புநுணை பலா
வலரி நறவம், வன்னிதாத திரிலிகு நாரங்கஞ் செசசை யாவிலிங்கை குருந
துவிளா மாநாவன் மருது, பொன்னிறு விரைகிளுவை சநதுமுதற் கோட்
டுப் பூவகைமென் றளிர்வகைகள் புனிதவலம் புரியே, துன்னுநறுஞ் செவ்
வநதி கொககிறகு பசசை துமபையருக் கொழுநதுசிவ கரநதைகதிர்த் துள
[பம். (௱௨)

முதலாய சலப்பூமா தவிமயிலை மல்லி முல்லைநறுஞ் சம்பங்கி சாதிமுதற்
கொடிப்பூ, விதமாதி பற்பலவுஞ்* சண்ணவதி யென்ன விளம்பளவின்
மேலுநனி மிக்கதிர வியமற், புதமாக மனுமுறையா குதிசெய்நீற் றினிற்
றும் பூலமுக வாசமுதிர் புதியநறுந தேஙகாய், பதமாரின் சுவைக்கனிக
டுகூலமுத லாய பட்டினம்பொற் பூலிகுச பலமுதற்பல் பொருள்கள். (௱௩)

* மூர்க்கம் - உண்டு சேவதருருகயாப்பக்குவஞ்செய்யப்பெற்றது.
* சண்ணவதி = தொண்ணூற்றாறு.

இனியசுகோ கிருதமுதற் சுருக்கினிறைத் ததன்மே லிருஞ்சுருவ மூடியெ
டுத் தெழுதுமனு வெடுத்தே, பனிவனிகண் முற்றுமே லெழுந்துவலஞ்
சுழித்தூண் பாரித்த நிறையுணவின் பான்மையுணர்த் தேப்ப, நனிபுரித
லெனவொலிப்ப வின்னியங்க ளொருங்கே நான்மறைமா பூரணா குதிசெய்து
நயந்தாங், கனககடங் கவாசவமு தேசர்முத லோரை யவரவர்தங் கடங்களிற்பூ
சனை யாற்று கிற்பார். (௯௫)

மணங்கமழுந் தூபந்த நெய்த்தீபங் கோட்டி மலிசுவைப்பால் வருக்கவோ த
னமாதி யூட்டி, வணங்கவைபின் னருந்தீட்டி மாதீப நீட்டி மலிநானென்
குபசாரம் வயங்குவழி பாட்டின், குணங்களிமெ யன்பின்மனுக கிரியாதி
கூட்டிக் குலமறைசொ றிரிசுபன்னங் கொன்றைமுதற் சூட்டிக், கணங்கெ
ழுநா மாவளிநா லெடுத்தினிதி றைட்டிக் கர்ப்பூர மாதீபங் குடிலைவரை காட்டி.

அனந்தரமஞ் சலிசிரமே லினந்தரநோர் கின்றுங் காரியமுஞ் செந்தமிழு மாய
பா னுவந்த, கனந்தருமா ரியவேத மின்சுவையா துரிய கவின்றருசீ ரியவேத
மிரண்டுமெடுத் தோதி, யினந்தருமா தெரிசனத்தின் பெரும்பேறு பெற்றுங்
கெதிர்நிற்பா ரெவர்க்குமிரும் பூதிப்ர சாத, தனந்தருவர் தினந்தொறுமிவ்
வகையிருகா லுமுநூல் சாற்றுபூ சனைபுரிந்து போற்றுவருண் மகிழ்வார். (௯௬)

இத்தகையின் மகாயாக பூசனைநா டொறுஞ்செய றிடை யிடையேநா தனவிம்ப
நயனோன்மீ லனமே, சுத்தசல நிவாசநகர்ப் * பதக்கணந்தா னியமேற் றூய
வாசஞ் சயனரோ கணமாதி புரிவார், பொற்தசலம் புரியட்ட பந்தனபூ சனை
மன் புரீஇவிம்ப சூத்திரவீட் சணநேர்வா னுகமே, ரத்தினயா நியாசமே
யந்திரதா பனமே நாலிருபந் தனமேலுஞ் சுவணபர்த ஞதி. (௯௭)

நவநீத மௌனமே தைலாப்பி யங்க நவிற்றுபயஞ் சகசொரூப மிப்பால
யாதி, யவிர்தருசஞ் சோதனமே விம்பசுத்து யாதி யவைபுரிவார் புவிபுயமு
னுனித்தகுப தினத்தி, லுவமனிலா விம்பரட்சா பந்தனஞ்செய் துவப்பா
ருயைபரிசா குதிநியா சார்ச்சனை செய் தெழுவார், திவியமகா பூரணா குதிகள்
பூ சனையாத் திராதான மகாதான மாதிபுரிந் திசிறப்பார். (௯௮)

பின்புசிவத் துவிசசிவா சாரியர்க ளாமே பிறங்குயமு தேசகட முதற்கடங்க
ளெல்லா, மன்புநிறை தரவுட்டி னீடசிர மேற்கொண் டாலயஞ்சூழ் பதக்
கணந்தம் மடியுரிஞ்ச வடிபோர்த், தின்புயலி தரப்புதுப்பூம் பாவாடை யிடை
வைத் தியங்கியிணைக் கவிகைசா மரை கடங்களின்மே லிசை, முன்புவருங் கானி
கழ்ந்த வுபசாரத் தெண்கான் முதிர்தருபற் பலவகைய வுபசார மொய்ப்ப.

## வேறு.

ஆர்வமிக வுடலசையா வழகுமிகத் திருக்கோயிற்
பூர்வதிசை தனிற்றிகழ்கோ புரவாயி னெறிப்புகுந்து
நேர்வருமக் கடங்கடமை நிகழ்த்துமுறை யாங்காங்கு
தார்வளரவ் விம்பகுல் சமீபமுறத் தாபித்தார். (௪௦௦)

சந்திகயார் சாதகும்பத் தவிர்கும்பங் களனைமரு
மந்திரமா மயமூர்த்தி மானவிம்பங் களிற்பிரம
ரந்திரமார்க் கத்திசயா னளினமுறீஇ வீற்றிருப்பத்
தந்திரமா மனுவினியா சம்புரீஇ யன்புருவாய். (௪௦௧)

நிரந்திரந்தி யாசகமுத் திலைகாட்டி யினிதேத்தி
நிரந்தரசா ந்த்தியமா நிலையுறவந் நிறைகும்ப
* துரந்ததிரு கரந்தனின்மேற் றூக்கியெடுத் தாக்கமொடு
வரந்தருமா கும்பாபி டேகமுறை வயக்கினார். (௪௦௨)

பதஞ்சலியா தாங்காங்குப் படர்ந்துபடர்ந் துவகைமிகும்
பதஞ்சலியாம் பணிவேந்து பார்வைகளி கூர்வகையன்
பிதஞ்சலியா நிமிர்ந்துளநன் றிருமதகிற் பெருகியெழு
விதஞ்சலியா யாசகமா வெனக்குவித்து விரித்திருகை. (௪௦௩)

மதிதொழுதின் புறவபய னிராசசூ டாமணிவேந்
ததிமகிழ்வுற் றுடன்சார வமுதேச னுமையாதி
பதிதொளிர்பல் விம்பாதி புத்தேளிர் தமக்கெல்லாங்
கதிதருகும் பாபிடே கம்முழுதும் புரிந்துவந்தார். (௪௦௪)

ஆங்குடனே நவவாச மணிந்தருச்சித் தமுதருத்திப்
பாங்குறுபா ளிதீபம் பணிமாறப் பணியெவர்க்குந்
தேங்கொளிவெண் டிருநீறு திருப்பாதோ தகமளித்தா
ரோங்குறுமித் திருப்பணிமுற் றுஞற்றுவித்த வொருசேடன். (௪௦௫)

உடனேயச் சிவமறையோ ருவந்துமகா வபிடேகந்
தொடர்பாய பொருளயுத நியுதமெனுந் தொகைபெருகத்
திடனோடு செயவளித்துச் செய்வித்தாங் கவர்புரியு
யடனோடு மாபூசா வகைகண்டு வகைகூர்ந்தான். (௪௦௬)

அப்பெரிய சிவத்துவிச ரனைவரைய மவர் * வசதி
யிற்பிரிய மூறநகர்வித் திருந்தளியிற் றிருந்தவைத்
தொப்பரிய பெருவாழ்விங் குவந்தளித்தீ ருமக்கெளியே
னெப்பெரிய வகையெல்லா மீந்தாலு மெதிராமோ. (௧௦௭)

நிகர்வரிய பேருதவி நீர்செய்தீர் நுமக்கேழை
பகர்வரிய தென்னினுநூல் பகர்முறையேற் றருள்கவெனுப்
புகர்வரிய சந்தனதாம் பூலாதி மேலொரு
மிகவரிய கண்டிகைமா ணிழைசுவணும் பாவைகள். (௧௦௮)

பற்பலமுற் கிரியாரம் பத்தளித்த தன்றியுமே
லற்பமல வாயிரமா யிரமாக வள்ளியள்ளிப்
பொற்புறுதக் கிணைகணனி புனிதமுற வினிதளித்தான்
பிற்பரவி யவர்நிறைந்த பெருந்திருக்கூட் டம்பணிந்தான். (௧௦௯)

முற்றினமே முதலாக மூதகுசீ ருணோர்க
சற்றவருக் கற்றசிவ னருள்பெருகு சிவதீக்கை
பெற்றான்பூ சனை†யினிமை பெறுவேத சிரவணமு
னுற்றமகே சுரபூசை யுத்தமவிப் பிரவுண்டி. (௧௧௦)

முதலியபல் வகைநிதமு முறைமையிற்செய் வித்துவந்த
வதனிலுமும் மடிபெருக வங்காட்செய் வித்தனையோர்க்
கிதமலிதக் கிணையாதி யினிதளித்தா னேனையபல்
விதமலிபற் பலர்க்குமவர் விழைவினுமே தகவளித்தான். (௧௧௧)

இவ்வகையே கும்பாபி டேகதினத் தெனையவெலா
மெவ்வமறப் புரிந்தன்றே யிபமுகன்சே யிறையிறைவி
யைவருஞ்சண் டேசரோ டவனியுயப் பவனிவருந
திவ்வியநன் மகோற்சவம்பல் சீர்பெருகச் செய்வித்தான். (௧௧௨)

வழிநாளுங் கலியாண மகோற்சவஞ்செய் வித்தன்பின்
மொழிஞான சிவத்துவிச மோதசிவா சிரியர்குழாஞ்
செழிநீறு கண்டிகைமுற் சிவவே டமினிதிலங்க
விழிநேர்கண் டவருருக மிளிர்மணிப்பொற் சிவிகைகளில். (௧௧௩)

வீற்றிருந்து நகர்வலஞ்செய் மேதகைய வுற்சவமும்
போற்றுமுறை மையிற்புரிந்தப் போதசிவத் துவிசர்தின
மாற்றியன்பண் டலநியம வபிடேகார்ச் சனையாதிக்
கேற்றபொருள் பலநாளு மினிதளித்து நடத்துகிற்பான். (௧௧௪)

* வசதி=வாசஸ்தானம்.
† இனிமைபெறுவேதம்=தமிழ்வேதம்.

இவ்வியல்பி ளுடொறுமவ் விறையமுத சுயம்பிலிங்க
மைவருமா மணிமிடற்றெம் மாதேவன் மாதேவிக்
கெவ்வரிய பொருள்களுங்கொண் டிருமூன்று காலநிகழ்
திவ்வியபூ சனையென்றுந் திகழ்வுறுமா நியமித்தான். (கக௫)

நித்தியநை மித்திககா மியமெனநா னிகழ்த்துமிய
லுத்தமபூ சனைவகைக ளொருவாது தினம்வாரம்
பத்திநிறை பக்கமதி பரவுவரு டோற்சவமுன்
னெத்துணையுஞ் சிறப்பநடந் தியலுறுமா நியமித்தான். (ககசு)

எல்லாமு மெந்நாளு மிடைதளரா தியலுறுமா
வில்லாரு நிதிகோடி மேலுமமு தேசன்முதற்
பல்லாரு மணிகலன்பற் பலவகையு நிறைத்தெல்லாம்
வல்லான்மந் திரநாதன் மலிபொருளாம் படிவகுத்தான் (ககஎ)

பின்னனைய வமுதேசன் பெரியநா யகிதனிக்குப்
பன்னிரண்டா யிரநிட்கம் பல்குபொரு ளோரோர்வருடந்
தன்னிலுமாங் குறுவிளைவாற் றப்பாது தரற்குரிய
நன்னிலமவ் விராசசூ டாமணியா நரேந்திரனே. (ககஅ)

ஆவணத்தன் பாலளிப்பித் தானயுத நிரையோடும்
பாவணத்த சிவத்துவிசர் பல்லோர்க்கும் பரம்பரையா
மாவணத்த வனுபவத்தின் வருசருவ மாணியமாப்
பூவணத்த நிலம்பலவப் புரவலனு லளிப்பித்தான். (ககக)

இன்னனமற் றென்னெனநன் றினிதாய்ந்தத் திருக்கோயிற்
கென்னவுமேன் மேனிறைய வெல்லாமும் வகுத்தமைத்தான்
பின்னனைய சூதவனப் பிரதேச பாலகராத்
தன்னிகரெண் வடுகேசர் சாத்தாசண் டிசையிவனா. (கஉ0)

விதிவழிமுன் றனித்தனியவ் வியனகரி னுங்காங்கு
வதிதருவான் பதிட்டைவினை வயக்கியநாண் முதலனையோர்
மதிதருபூ சனைவகையு மனுநாத னிமாசலைவாழ்
முதிர்மணிப்பொற்கோயில்களின் முறைபுரிபூ சனைவகையும். (கஉக)

தன்னலந் நகரிடைமுன் றுபனஞ்செய் சிவத்துவிசர்
மன்னுநின் றெந்நாளும் வழிவழியா மரபின்வழா
தின்னமுற் றொழிந்தன்போ டின்போங்க வியற்றிவரு
கென்னுநின் றெதிர்வேண்டி யிவைவித்தா னியமித்தான். (கஉஉ)

இப்படியிப் படியுய்வா னியாவுமியற் றியசேடன்
மைப்படிவ னளித்தருளான் மார்த்தமா கதவிலிங்கத்
தப்படியர்ச் சனைபுரிந்தெ மன்னையிடத் தமுதேசன்
றுப்படிக டினந்தோறுந் தொழுதுவந்தங் கின்புறுநாள். (கஉ௩)

வேறு.

மாபின்றி லையொன்பாரணை மண்டல வழிபே காதி
தரமிக முடிப்பித் தோகை தழைத்தன னுடனின் றெல்லா
நரபதி தரிசித் தின்ப நாலையுட் படிந்து வாழ்ந்து
பரவியப் பன்ன கேசற் பணிந்தரி தகன்றூர் புக்கான். (கஉ௪)

மகியா சிராச சூடா மணியவ ணகன்ற பின்ன
ரகியா சனைய கான மகலரி தாகி யுள்ளம்
பகிர்மதி வேணி யண்ணல் பதமல ரருட்டே னுண்டு
சுகிதரு பமா மாகச் சூழவாங் கமர்ந்தா னென்று. (கஉ௫)

வேத்திர மலர்க்கை யெம்மான் விளம்பவே தியன்சே யெந்தாய்
நேத்திர சோத்தி ரன்பின் னிகழ்வருள் கெனவன் னேனக்
கேத்திரத் தவன்பின் செய்கை கிளத்தியாங் குரைத்து மென்னுச்
சாத்திர முனிவர்க் கன்பு தவாதவச் சூதனோதும். (கஉ௬)

வேறு.

உரைத்தவர் வினவினர் திருப்பணி பணிபதி யுஞற்றிய சரிதமி தொருவாத
வரத்திரு மனைமக நிதிக்குவை நிறைசுக மடுத்திக நலன்முழு துறவாழ்பு
பரத்தினு நுக்ருபு முழுச்சுக வகைபல பவத்தொடர் பறவரு பலபோக
விரத்திய ரரனடி மலர்த்துணை நிழன்மரு வியத்துவி தநிலைபி னுறுவாரே.

ஆதிசேடன் றிருப்பணிச் சருக்கம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் அ௬௩.

---

# ஆதிசேடன் சிவார்ச்சனைச் சருக்கம்.

---

அனந்தனி யற்றிய திருப்பணி யரன்கொடி றத்தினை யுரைத்தனம்
பினந்தனு ளற்பெழு தரத்தனி பிறங்கும ருச்சனை நவிற்றிய
கனந்தருமிக்கதையினித்துறுகவின்பெறு பொற்புள தெனச்சொலு
மினந்தரு மச்சிவ கணத்திறை யெனந்திம னத்தளி மிருத்தரோ. ()

இருதய கமல நடுவினிற் றீப மெனச்சொலிக் கின்றதாப் பாவித்
தொருமையின் வளியைப் பூரகத் திடமூக்குட்புகவேற்றிக்கும்பகத்தாற்
பிரிவற நிறுத்தி யணையவூங் கார பீசத்தின் மனத்தைவைத் துடன்முன்
மருவுகா ருவாத சாந்தமேற் சுழுனை வழியுகைத் தும்படு மனுவை. (கய)

துரிசற வைங்கா லடுக்கியுச் சரித்துச் சோடிகா முத்திரை யதனால்
விரிவுறீ ரைய தோமு காம்புய முகுள மேனிமிர்ந் திலகுறப் புரிந்துமுன்
மருவுதா லடங்கிப் பிங்கலை வழியின் வருநிமிர் சகப்புரிந் ததன்மேற்
பொருவளி பின்னும் பூரகம் புரிந்தப் பூரக வளியினன் பனமாம். (கக)

தனிவன சத்தி லமர்ந்திருப் பவனாய்த் * தாரகா காரம்போன் றவனா
யினிதுறு சாந்த பீசமா மயனா யிதயசம் புடிதசே தனனாய்
முனிபுரி யட்ட சத்தினின் மெரீஇய முத்தனாய்ச் சூக்கும னாகிப்
புனிதவூங் கார முடியனாய்ப் பிந்து பூதனாய்த் தனிநிரா மயனாய். (கஉ)

நிலவுமான் மாவைப் பாவனை புரிந்துமுன் னிறுத்துமவ் வளியைமே லேற்றி
யிலகுசங் கார முத்திரை யதனா லிதயநின் றணையசி வணையக்
குலவுபல் பீச சகிதமந் திரத்தைக் கூறியாங் கெடுத்துமேற் கொடுபோய்ச்
செலுமுறை துவாத சாந்தவம் புயமேற் றிகழ்பர சிவனிடைச் சேர்த்தி. ()

அயனிடைச் சத்தப் பரிசமே ரசமா லவனிடை ரூபகந் தங்கள்
வயவுருத் திரன்பாற் புத்தியாங் கார மகேசன்பான் மனமும்விந் துவுமே
யுறைசதா சிவன்பா லொடுக்கியித் தொகைசேர்ந் தொன்றிய சூக்கும தேகச்
செயலறு சுத்தி செய்துபின் றூல தேகசுத் தியுமுறை செய்வான். (கச)

பொன்னிற நிவிர்த்தி கலாமயங் கடினம் புகலுநாற் கோணமுன் னவ
மன்னுறு மியல்பிற் பிருதிவி பூத மயத்ததாத் தன்னுட னனையோர்ந்
துன்னுபூ ரகரும் பகத்தினம் பீசத் துடனிவிர்த் தியின்கலா மனுவைத்
துன்னுமும் படநகத் தைம்முறை கூறித் துறுவளி துவாதசாந் தம்மேல்.

ஏறிய வைங்கா லேற்றிப்பின் வல்மூக் கிரேசகத் தாற்சுழித் திதனே
டூறில்கந் தாதி பிருதிவிக் குரித்தா யியைகுண மைந்தைசீத் திணைய
வீறுமண் ணனில மயமதா யொழிபு மேலின பாவனை புரிந்துப்பின்
மாறில்வெண் ணிறமே பிரதிட்டா கலையின் மயநெகிழ் பான்மதி வடிவம்.

ஆகிய வியல்பி னப்புபூ தந்தா னாகத்தன் றேகத்தைப் பாவித்
தேதற முன்போ லிடையினால் வளியை யிலங்குநாற் பீசத்தோ டியைய
வோதுறு பிரதிட் டாகலா மனுவை யும்படு முகநான் முறைசொற்
றூதிவாழ் துவாத சாந்தமட் டேற்றி யதனைப்பின் பிங்கலை நாடி. (கள)

* தாரகை ஆகாரம் எனப்பிரித்துப் பொருள் கொள்க.

வழியிரே சகத்தாற் கழித்திர தாதி மலிகுண நான்குநீத் தனைய
பொழிதரு மப்ப பூதந்தீ மயமாப் புக்கொழிந் தெனநினைந் ததன்பி
னொழிவில்செந் நிறமே வித்தியா கலையி னுருவமுட் டிணந்திரி கோணந்
தழுவிய லங்கி பூதம தாசத் தன்னுட றன்னைப்பா வித்தே. (௧௮)

தேசமுப் பீச வித்தியா கலாமந் திரமும்ப டீற்றுறச் செபித்தே
யேசற முன்போல் வளியைமே லேற்றி யிரேசிந்து ரூபமுள் ளுயங்
நேசமுக் குணநீத் தவ்வனற் பூத நீர்மயத் தொழிந்ததா நினைந்து
காசறப் பின்பு கருநிறஞ் சாந்தி கலாமயஞ் சவித்தல்சட் கோணம். (௧௯)

முதலியல் வாயு மயமதாத் தனது மூர்த்தியை நினைந்துமுன் போலக்
கதுவிரு பீச சகிதமச் சாந்தி கலாமனு வும்படீ ருக
விதமுற விருகாற் புகன்றுறு காலை யிடையினற் பூரக மியற்றி
முதுசுழு முனையா லிருமுறை யேற்றி மூதகு துவாதசாந் தத்தில். (௨௦)

பின்னரிரே சகஞ்செய் தப்பரி சாதி பேசிரு குணங்களு நீக்கி
யுன்னுமவ் வளியப் பிருதிவி மயமா யொழிந்தெனப் பாவித்தாங் கதன்மேற்
கன்னவில் படிகஞ் சாந்திய தீத கலாமய மிடந்தரல் வட்ட
முன்னிய னபமாத் தன்னுட றன்னை முன்னிமேற் பீசமொன் றுடனே.()

சாந்திய தீத கலாமனு வம்ப டந்தமா வொருமுறை சாற்றித்
தோய்ந்திடு வளியை யிடையிற்பூ ரித்துச் சழுனையா லோர்முறை யேற்றி
யேய்ந்தபிங் கலையா லிரேசித்தா காயத் தியைகுண சத்தமொன் றினையுங்
காய்ந்துபின் னனைய காயமேற் பரமா காயமாம் விந்துவிற் கலந்து. (௨௨)

இத்தகு விந்து மயமதா யொழிந்த தெனநினைந் திவ்வகை சால
சுத்திசெய் தனைய பிராரத்த தேகத் தொடர்புறு துரிசெலாந் தொலைய
வத்திர மனுவை யும்படீ ருக வறைந்துகால் வலப்பெரு விரலிற்
சித்திர பானு வெழுப்பியவ் வெல்லாந் தீந்துறத் தகித்ததா நினைத்து. (௨௩)

ஆயபின் சிவாய வெளசடென் றோதி யரியநற் றுவாதசாந் தத்தின்
மேயமாண் பரவிந் துவினமு மமுத வெள்ளிய தாரைக ளாகை
காயமுட் புறம்பு நனைந்ததா நினைந்து கருதிய விருதய நடுவி
லேயதண் டிலைபொற் கருணிகை முதல வியைதரு சலசமென் மலரை. ()

ஆதன மாக முக்கலைக் குடிலை யாலமைத் ததன்கரு ணிகையிற்
சேதன கிரியா ரூபசூக் குமமெய் திகழுநாற் கலைப்பிர ணவத்தான்
மேதக வந்த தாநினைந் தனைய மிளிர்தரு சூக்கும வுடலி
லோர்துழு துவாதசாந் தத்திற் சிவயா யுடனயர்ந் தொளிருயான் மாவை. (௨௫)

அனையசீ வான்ம மனுவுரைத் தெடுத்தாங் கவிரொளி யுருவுடை யவனை
யினிதுதா பித்தே சத்திமந் திரத்தை யியம்பியாங் கதனினூற் சலக்குண்
டனகமாய்ப் புருவ நடுவினின் றெழுகு மமுதவெள் ளத்தபி டேக
நனிபுரிந் தங்க நியாசமே லியற்றி நாடுறு மிவ்வெலா மமைந்த. (உ௬)

விரவுமைம் பூத சுத்திமுற் றியபின் விசுத்ததே கத்தனாய் விழைந்து
பரவுமன் பொடிமந் நாபியந் தடத்திற் பதிகிழங் கிடைமுளைத் திருநான்
மருவுமங் குலத்தோர் நாளநீண் டிதய வரையுற லதனிலெட் டிதழோ
டொருதனிச் சுவேதாம் புயமிரு தயமே லொளிர்தர வுரைத்திடுமதன்மேல்.

இனியவங் குலநான் கிரண்டுயர் படிக விலிங்கமொன் றிருப்பதா நினைந்து
புனிதபூ சோப கரணங்கண் மனத்தாற் பொலிவுற வமைத்துளக் கமலத்
தனிமல ரிடையே விசேடவர்க் கியமுன் றுபன முறையமைத் தனைய
பனிமலர்க் குரிய கந்தநா ளங்கள் பத்திர கருணிகா திகளில். (உ௮)

சாற்றுமா தார சத்திமுற் குடிலா சத்தியீ றுயவா தனமிட்
டேற்றவப் படிக விலிங்கக்கூற் றிடையே யெழிற்சிவ மூர்த்தியை நிவேசித்
தாற்றுதண் டபங்கி முண்டபங் கிரியா சம்புரிந் தவ்விலிங் கத்திற்
றேற்றுறு நெடுமை மூர்த்தியின் வித்யா தேகத்தை நியசித்தாங் குடனே.()

நேத்திர நியாசம் புரிந்தபி னந்த நிகரிலாப் படிகமா விலிங்க
மூர்த்திதன் பிரம மந்திர நெறியின் முதுபர சிவத்தைமேற் கொணர்ந்து
நார்த்தவா வாக னாதியர்க் கியங்க ணவிற்றித யாதிய நியாசம்
பாத்தியா சமனார்க் கியமலர்த் தானம் பயிற்றினின் மாலியங் கழித்தே.(௩௦)

நவமல ரணிந்து தைலமுன் னாவ நனிமிக மனுமுறை யாட்டித்
தவளவொற் றுடை சாத்திவெண் ணீறு சாந்தமுன் னணிந்தில யாங்கந்
திவியபோ காங்க பூசனை யாற்றித் திருவமு தாதிய நிவேதித்
தவிர்செப நிவேத னம்புரீஇ முக்கா லஞ்சலி நிறைமல ரளித்தே. (௩க)

துதிபுரீஇ நாபி குண்டத்தி லோமந் தொடங்கிமே னின்றெழு கமுதே
புதியகோ கிருத மாமுடித் தனைய புண்ணிய மண்ணனல்கைக் கொடுத்தே
ததியுறு மட்ட புட்பமுஞ் சாத்திச் சத்தியோ சாதமுன் னாகப்
பதியருண் மூல மனுமலர் புனைந்து பராமுகார்க் கியங்கொடுத் ததன்மேல்.

முன்னுபோ காங்க தேவர்க்கு மளித்தம் முதியமந் திரர்களை யெழுப்பித்
தன்னிகர் சிவமூர்த் தியினிலுஞ் சிவாஅ சனமனுக் குலங்களை யெழுப்பி
யுன்னுமவ் விலிங்க பீடத்தும் யோசித் தொண்சிவ மூலமந் திரத்தாற்
பின்னருச் சித்துத் திக்குபந் தனமும் பிறங்கவ குண்டனந் தானும். (௩௩)

தேனுமுத் திரையும் புரீஇப்பர சிவனைத் திகழ்புரு நடுவமர்ந் தொளிரும
வானிமிர் தார காவடி வாக மன்னுற நினைந்தினிப் புறத்து
மீனமில் பூசை புரிதர வருள்கென் றிரந்தனு மதிபெறீஇ யுவந்திம்
மானமார் வகைய வந்தரி யாக மாண்புறப் புரிந்துபின் மாதோ. (௩௪)

அத்திர மனுத்தா ளத்திர யத்தா லாங்குறு விக்கின மகற்றிப்
பத்துள திக்கு பந்தனம் புரிந்தப் பணிபிறை யொளிர்தழன் மதிலு
முத்தகு மகிழ்தர வணிவலச் சூழ்றும் முறைபுரீஇக் கவசத்தி னாலே
மைத்துறு தேனு முத்திரை யத்தி மனுப்புகன் றுஞற்றியம் மாண்பால். ()

தாவிலாச் சத்தி சமூகமேல் கீழிற் சார்ந்துசூழ் சாலமா கினைந்து
மாவருக் கியவட் டகையையத் திரமா மனுவினிற் கழீஇயபி டேக
பாவன செம்பூ விதமணிக் கலசம் பயில்புரு நடுவரை யுயர்த்தி
யோவிலவ் விந்துத் தானசீன் றெழுக்கு மொள்ளமு தக்கல சத்தின். (௩௬)

உள்ளுறக் கொண்டு மெல்லென விழித்தவ் வுதகத்தை யிதயமந் திரத்தவ்
வள்ளவட் டகையிற் பூரித்துச் சாந்த மலரறு கக்கதை வில்வ
நள்ளுறப் பெய்து சிவாசன மூர்த்தி நவிற்றுறு பிரமபஞ் சகமே
யொள்ளிய வித்யா தேகநேத் திரமே யொண்சிவ மூலமந் திரமில். (௩௭)

அங்கபஞ் சகமே மூலமீ ரொட்டா வருச்சித்துச் சங்கிதா மனுவாற்
கொங்குற வபிமந் திரித்திட் டாவ குண்டனை யத்திர கவச
முங்குறைத் தியற்றித் தேனுமுத் திரைதந் தறுசிவ மூலத்தவ் வுதகந்
தங்குதன் றலைமேற் புரோட்சித்தக் கிரத்தாற் றகுதிர வியசமூ கத்தும். ()

அதுபுரீஇக் கவசத் தப்பியுட் சணஞ்செய் தவற்றையாங் கிருதய மனுவாற்
றிதமுற வபிமந் திரித்தவ குண்ட மீதேனு முத் திரைகொடுத் தவைய
முதமய மாக்கி யருக்கிய சலத்தோர் முழுமலர் தோய்த்துமஞ் சனஞ்சா
ரிதகடத் தமைத்துத் தேனுமுத் திரைதந் தின்னமு தாக்கியிவ் வகையே.

திருத்தகு தான சுத்திபின் விசேட சிவார்க்கிய தாபனஞ் செய்கை
கருத்துற நிறைத்த திரவிய சுத்தி கண்டபி னமுதநா யகனை
யுருத்திரு மேனி நீண்டபூ சனைதா னெறுத்தசா தியனுஞற் றுதலே
யருத்திசால் விதியென் றச்சிவ சாதி யாசுர்தா னுஞ்செயல் புரியும். (௪0)

நலனுறு தனகா சனத்தினிற் சிவாச னம்மனுப் புகன்றறை யிட்டு
மலர்தன திதயந் தனிற்சிவ மூர்த்தி மனுமலர் புரிந்துசந் தனத்தின்
றிலகநெற் றியினேத் திரம்புகன் றணிந்து சிரத்தினின் மூலத்தாற்சேர்த்தி
யலர்சிவ சாதி யாகவே தனைக்கண் டதன்பின்மந் திரசுத்தி யாற்றும். (௪௧)

கரமிரண் டிதயத் தஞ்சலி யாக்கிக் கவினுற மௌனியா யிருந்து
வரமிகு மூலா தாரமுற் புருவ மத்தியாம் விந்திடம் வரையும்
பிரமபஞ் சகமேற் பிரமரந் த்ராந்தம் பேசுறு சடங்கமென் றிருபாற்
றரமிகு சங்கி தாமனுப் பிராசா தம்மனு வோடுமுச் சரித்தே. (சஉ)

மந்திர சுத்தி யிம்முறை முடித்து மார்புற வஞ்சலி கரங்கண்
மந்திர நாதா தேவதே வேசா வள்ளலே யெள்ளலே யாதிம்
மந்திரத் தமர்ந்தோ யாசையா லேழை வழிபட வேலற்றருள் செனக
மந்திரந் தன்பி னகநெகிழ்ந் துருக மரபினின் வேண்டுகொண் டதன்மேல்.

அரியநற் சிவகா யத்திரி மனுவா லட்டபுட் பாதியர்ச் சித்தே
பரவுமைஞ் சிரத்து மருக்கியங் கொடுத்துப் பரிமள தூபதீ பாதி
புரிபுரின் மாலி யங்களைந் ததனைப் புனிதபாத் திரத்தினி சானத்
துரியசண் டேசார்த் தம்மிரு தயஞ்சொற் றுவப்புற வைத்தனன் மாதோ.

பன்னுமத் திரமந் திரத்திலிங் கத்தைப் பாசுப தாத்திர மனுவா
லன்னபிண் டிகையை யவ்வம்பியர்க் கியநீ ரத்திரத் தாட்டியட் டகப்பூப்
பின்னரும் புனைந்து தூபதீ பம்முன் பேணிநின் மாலிய நீத்தோர்
துன்னல ருடனே யிலிங்கமீ தணிந்து தூயநீ ராட்டிமூ லத்தால். (சரு)

தரமிகு சுகந்த தைலமே யவைநெற் றண்டுல சூரணந் தைசநீ
ரரிசனப் பொடிநீர் தாத்திரி மாநீ ரவிர்தரு பஞ்சகவ் வியமே
யிரதவைந் தமுதம் பயைஞ்சா முதமா னிலகுபா னிறைதயிர் புதுநெய்
விரவிள வெந்நீர் தேன்சருக் கரைநீர் வியன்கழைச் சாறுசம் பீரம். (சசு)

பலவகை நரந்தந் தாடிம மாதி பல்கனிச் சாறிள நீரிவ்
வலகில வாக விடையிடைத் தூய வரும்புன லொடுஞ்சுவா சாந்த
குலமனு மூலத் தாலபி டேகங் குயிற்றிப்பி னம்மனுத் தூய
சலமிக வாட்டிப் பின்னரச் சங்கி தாமனு வொருமுறை யாட்டி. (சஎ)

பின்னரு மெண்பத் தொருபத மனுவாற் பிறங்கிய வாயிரந் தாவாரந்
துன்னுபொற் கலத்தின் றரைமுன் றேவ துலங்குசீ ருத்திர நமகம்
பன்னுறு சமக மாதிமா மனுவாற் பண்புற வாட்டிமேற் சுகந்த
மன்னுறு சந்த னோதக மிமநீர் மணமலர்ப் புனன்மணி யுதகம். (சஅ)

உவமனில் வில்வோ தகம்விசே டார்க்கி யோதக மேதக வாட்டித்
தவளவண் டுகிலொற் றுடைதான் கவசத் தனிமனுப் புகன்றுமென் மெல்ல
வவிர்தரத் துடைத்தக் கணத்தினத் திரத்தா லாமல ரணிந்துவெண் ணீறு
திவியசந் தனமக் கதையறு கரிய திருத்தகு வில்வம்புட் பாதி. (சகூ)

திருத்தகச் சிவமூ லத்திரு ளணிந்து சிவாசன பூசனை முறையா
தாரத்திரு தார சத்திமுற் குடிலா சத்தியீ றாகவொவ் வொன்றுங்
கருத்துற வவ்வம் மனுக்களால் யாவுங் கரிசற விரிவுறப் புரிபு
வரத்தபன் மலர்க ணிறைகராஞ் சலியை மருவிய விருதயத் தமைத்து. ()

அறிவொளித் தண்டா கிருதியே யுருவா யச்சிவ மூர்த்தியை நினைந்தங்
கறைமலர் நிறையஞ் சலியெமலைப் புருவ நடுவரை மூர்த்திமந் திரத்தான்
முறைமையி னுயர்த்தி யஞ்சலி தனிலம் மூர்த்திவந் தெனநினைந் திறக்கி
யிறையிரு தயத்தின் மெல்லென வமுத விலிங்கச்சூழ் வுறநிவே சித்தே. ()

சிரமுக மிதய நாபிசா னுவெனத் திருத்தகு மைந்துறுப் பமையத்
திரமிகு பஞ்சப் பிரமத்தா ணியாசஞ் செய்யுமத் தண்டபங் கிம்மேற்
பரவுமூர்த் தாய நமாந்தமாப் பிரம பஞ்சநி யாசமைஞ் சிரத்தும்
புரிதரு முண்ட பங்கியைம் முகத்தப் புகன்மனு வத்திர பங்கி. (ருஉ)

விதிபுரீஇப் புட்பாஞ் சலியிரு தயத்தின் விரவவைத் திதழியிந் தாதி [த்த
பொதிசடா முடியைந் திலங்கெழிற் பளிங்கு பொன்கரி தருணவெண் ணிற
வதனமைந் தைம்மூன் றம்பக மொருபான் யலாக்கர மாதிய மருவுங
கதிர்பளிக் குருவாண் டெண்ணிரு வயச்சு காசன மாதிய கவினும். (ருங)

வித்தியா தேகந் தனைநினைந் தனைய மெய்ம்மனு நமாந்தமா விளம்பி
யத்தகஞ் சலியை யுச்சியட் டுயர்த்தி யதனுளாங் கத்தனு மின்றே
சொத்துவந் தெனவோர்ந் திலிங்கவா கார முன்னுரு தஞ்சலிப் புகுந்த
வித்தகு முருவே தனைநதிலிங் கத்தி னியைபுற நியாசஞ்செய் தாங்கே. ()

வதனமைந் தினிலு நேத்திர நியாசம் வயக்கிமேற் புட்பவஞ் சலியை
யிதயமே னிறுத்தி மூலமந் திரத்தை யிசைத்துமேற் றுவாதசாந் தத்தம்
முதுமனுப் பொருளே யாம்பர சிவனை மோதமெய்ப் போதநிட் களவ
நிதவியா பகனைத் தியானித்தஞ் சலியை நீட்டிமேற் றுவாதசாந் தத்தில். ()

ஊங்குநின் றனைய பரசிவ னிரவி யொளியினுய்ப் புருநடு வரையுற்
றங்குமென் மெலநின் றிறக்கிவந் திதயத் தமைத்தபுட் பாஞ்சலி யதனுட்
டேங்குபல் கோடி யிந்தொளி யினனுயத் திகழுமப் புருநடு நின்றும்
பூங்குமிழ் வலமூக் கிரேசக வழியாற் புறத்துறீஇப் புகுந்தசா நினைந்தே.

அகணின்மலவிவ்விலிங்கமூர்த்தியின்வந்தமர்ந்தருள்கென்றுவேண்டழைப்பு
திகழ்புவி முதலுன் மனைவரை வியாப்த சிவபரி பூரண வியல்பை [த்
நகவிரி யறிவி லழுத்துமா வாக ணம்மித யம்மனு நவின்றே
தகுமுறை யாவா கனியிலச் சினையாற் சாற்றுமச் சதாசிவ மூர்த்தி. (ருஎ)

பிரமாந் திரத்தா லுட்புகுந் திதயப் பிரசவம் புயத்துவீற் றிருப்பப்
புரிபுதா பனிமுத் திரையின்முன் னழைத்த புனிதனை யிருத்துத லாகி
மரபின்முன் னழுத்து மதுரிலை பெறுத்தல் வயக்குதா பனமுமப் பரனை
வரமுறத் தனக்கு நேர்முக மாக்கு மாண்பதாய்ப் பரன்வியா பகத்தில் (நஅ)

தனதுபே ரறிவு மதில்வியா பகமுந் தங்கியொன் றென்றை யாசரிக்கும்
புனிதமாய்ச சந்நி தானமுந் திரையாற் புரிதரு சந்நிதா னமுமே
னைகவர்ச் சனைமுற் றளவுவே றகலா தமர்கென வேண்டுபு தகையும்
வினையதாய்த் தன்பால் வியாபக போதம் விலகுறுத் தகைவிளக் குவதாய்.

சாற்றுங்கட் டோர முத்திரை யாற்செய சந்நிரோ தனமுமென் றிவையு
மேற்றிரு தயமா மனுப்புகன் றியற்றி யிமாசலை யுமாபதே யாவுந்
தேற்றுமா தேவ சுவாகதந் கிலவென் றிருந்துவிண் ணப்பமுன் புரிந்து
போற்றரு மைந்த நன்குலந் தனையென் பொன்மொழி புகன்றதா நினைந்து

வேறு.

நமசு வாமிந் சர்வசெகந் நாதா நீதா போதாவிவ்
வமுத லிலிங்கத் தேசைபுரி யர்ச்சனைவ சானவரை
கமல பீதி மிகவெளியே னேர்ந்தன் றருளு கெனமீட்டு
விமல னெதிர்விண் ணப்பமுறை விளங்கப் புரிந்துகளங்கமற. (கூக)

மொழியைஞ் சிரத்துஞ் சுவாகாந்த மூல மனுவா லருக்கியமும்
வழுவில் கால கன்னிலிங்க மருவஞ் சலிமுத் திரைதந்து
தழுவு மிதயா தியங்கியாறு சங்க ளவ்வம் மனுவாற்செய
தொழில்வி லிலக்கி யம்மூலத் துணுற்றி யிரட்டை யத்திரத்தால். (கூஉ)

அவகுண் டனப்பின் கவசத்தா லாற்றித் தேனு முத்திரையுந்
திவளு மகாமுத் திரையுமுடன் சிவமூ லத்தாற் றந்துநம
சுவத சுவாகாந் தம்மூலத் தூய மனுவாற் பதங்கண்முக
மவிர்வென் னியினு முறைபாத்தி யாச மனார்க்கி யம்புரிந்தே. (கூங)

விரைசெய் மலரக் கதைதூர்வை மிளிர்கூ விளமென் னிலையிருகை
த முனிறைத்தாங் கருளபுட்ப தானம் புரிந்து கண்டையிடக்
கரனின் றொலிப்ப நறுந்தூபங் கதிர்நெய்த் தீப மூலத்தால்
வரதன் முகங்க ணிசிகள மார்பு பதநேர் தனிசுழற்றி. (கூச)

தொகுத்துப் பிரண வாகார தாலமிதுவோ வெனமுக்கால்
வகுத்துக் கோட்டி மலவலியை மடித்து ஞானப் பிரகாச
மிகுத்து விளங்க வருளுகென வேண்டு குறியா முறைவிளக்கி
முகத்துஞ் சிரத்துமுன் போல மொழியாசமனாக் கியமளித்தே. (கூரு)

பாவ னூபி டேகமுறை பயில மீட்டுங் கைலாதி
தாவில் சந்த னந்தமுறத் தக்க வரிசை யாலாட்டித்
தூவி சேடார்க் கியமனுமா தோய மாட்டித் தூயநறத்
தேவில் விலகு மெல்லியவண் டிருவொற் றுடை கவசமனு. (௬௬)

புகன்று சாத்தி மூலத்தாற் புனித நீறு விளக்கலவைச்
சுகந்த பவுர மக்கதைபைந் தூர்வை வில்வம் புட்பாதி
யுகந்து சாத்திப் பொன்னணைநா ணொளிருஞ் சுவண கௌபீனந்
திகழ்ந்தமிலகுவி சித்திரவத் திரம்பொற்பூணூன் மணிக்குழைகள். (௬௭)

ஆதி புனை இப்புட் பாஞ்சலிமூன் றளித்து மூலத் திண்டைமுதற்
கோதை புனைந்து புகைசுடர்முன் கோட்டி யாச மனர்க்கியந்த
போது மமேரு தங்காட்டி யுயர்சங் கிதையா லியாங்கந
காதல் வேண்டல் போகாங்கங் கவினப் பூசித் தருக்கியங்கள் (௬௮)

செறிய வினைய போகாங்க தேவர் பலர்க்குந் திகழவளித்
திறையீ சான முதன்முகமைந் தினிலு முறைதே னுப்பதுமந்
திறன்முச் சூலந் திகழ்மகரஞ் சிருங்க மெனுமுத் திரைகாட்டி
முறையஞ் சலிக டனித்தனியம் முகாங்க தேவர்க் கவர்மனுவால்.

ஓதயத் தையயப் புரீ இமூலத் தினிது புட்பாஞ் சலிசாத்தி
யெதிரின் பகாமுத் திரைகாட்டி யினைய சுபரா தியவொல்லாம்
விதியி னிமல சதாசிவன்பான் மேவு மேக பாவனைசெய்
ததன்மேற் றூப தீபமளித் தாச மனர்க்கி யங்கொடுத்தே. (௭௦)

ஆங்கு நிரைத்த நிவேதனங்க ளனைத்தும் புரோக்கித் தத்திரத்தா
லோங்கு சமக்கா ராட்டகங்க ளூனுற்றி மிருத்திஞ் சய மனுவாற்
பாங்கி னடிமந் திரித்தாசு பாற்றி யமுத மயமாக்கித்
தேங்கு சபரி வாராய சிவாய நைவேத் தியஞ் * சுவகா. (௭௧)

எனவவ் வெற்றின் பெயரிடைவைத் தியம்பி நிவேதித் திம்மனுவாற்
புனித பானீ யங்கொடுத்துப் புகலா சமன மாத்திரந்தந்
தனகன் கரங்கள் சந்தனத்தா ளாலே கவசத் தாற்றுவட்டி
யினமெல் லிலைகாய் முகவாச மினிதீந் தருச்சி யயளித்தே. (௭௨)

பூசித் தொருகான் மூலத்தாற் புகையுஞ் சுடரும் பினுங்கோட்டி
நேசித் தாச மனர்க்கியமு நேர்ந்து மலரக் கதை தூர்வை
தேசிற் சிறந்த வில்வாதி திகழ்கைந் நிறைத்தஞ் சலியாவு
பாசித் தகில தத்வாதி பதயே சிவாய நமவென்று. (௭௩)

புகன்று பவித்தி ரஞ்சாத்திப் பொருளின் மாதி பாதியெலாந்
திகழ்ந்து பரம சிவஞான தேசு நிறைக வெனக்கோட்டிச்
சுகந்த நீறு சாத்திமுறை தூய சருப்ப ணங்கவிகை
தொகுந்த கவரி சிவிறிமுதற் சோட சோப சாரமெலாம். (எச)

மரபிற் புரிந்து சிவத்துவமே வயங்க வேண்டற் கறிகுறியாப்
பரவு பூளித மாதீபம் பகரும் விதியிற் பணிமாறப்
புரிபா சமஞர்க் கியமளிதது புட்பாஞ் சலிதூய்ப் பிணமாமுத்
திணைபஞ் சமுகி முத்திரைக டிருந்த வளித்தா யிரநாமம். (எரு)

சாற்றி யளியா னிறைவிவ்வார்ச் சனைசெய் தூருத்தி ராக்கவடம்
போற்றி யெடுத்து வலக்காத்தாற் புட்ப மமைத்து வாமகரத்
தாற்று செபநூற் றெட்டுருச்செய் தருக்கி யோத கவ்வலக்கை
யேற்றம் மலரு முடன்வாங்கி யினிதுற் பவமுத்திரையாலே. (எசு)

அனைய செபமே கன்மமே யான்மா வேயென் றிம்மூன்றும்
புனிதன் வரத காத்தின்மனுப் புகன்று நிவேதித் துறுதத்த
வினைசெய் தனைய மலர்சாத்தி மீட்டுஞ் சங்கி தாமனுவை
நினைபோர்பதின்காற்செபித்தளித்தந்நிமலவிலிங்கத்தென்கீழ்பால்.

அனாக சிவாச ஞதியமைச் சருச்சித் தேத்தித் தன்குருவைப்
பினர்மேற் றிசையிற் சிவயோக பீட மேல்வித் தியாபீடந்
தனையர்ச சித்தே சிவாகமமேற் றயங்கப் பூசித் திவையாதி
வினைகண் மனுப்பா வனைமுதல விதியோர் சிறிதும் வழுவாமே. ()

அருமை பெருமை பாராட்டி யன்பு பெருகி நப்பெருமான்
கருணைப் பயோத ததிநதியாய்க் கலந்தாங் கிருகண் ணருவியெழு
வுருக வுளமு மிருகரங்க ளொளிர்சென் னியின்மேற் குவிந்தேறத்
திருமு னமுத சுயம்புலிங்க தேவோத் தமன்பொற் றிருக்கோலம்

கண்கள் குளிர மெய்குளிரக் கருத்துங் குளிரக் கண்டிமையா
தெண்கள் குளிர்ச் ருத்திரமு மெல்லாங் குளிரு மிருந்துதிகள்
பண்கள் குளிர வெடுத்தோதிப் பணிந்து பணிந்து பலமுறையு
மண்கள் குளிர வாய்குளிர வழுத்தி மீட்டும் பெருகன்பால். (அ0)

வேறு.

திருமுனம் பணிந்தெ ழுந்து திருவருட் சலதி மூழ்கி
யொருவரி தாகி நின்று னுடன முதேச னந்த
வருவுருச் சுயம்பு லிங்கத் தருளுரு வாயெழுந்து
பொருவில்சுந் தரப்பொற் கோலம் புயங்கர்கோன் காணநின்றான்.

மலவிரு ளொழிக்குந் தேசு மலிதிரு வேணிகண்டா
னிலவுறு மதனிற் றூனே நிகழ்பிர ணவசொ ரூபி
பலரிலை யென்று தேற்றும் பைங்கொன்றை மாலை கண்டான்.
குலவுபஞ் சாக்க ரத்தின் குறியுமத் தாரிற் கண்டான். (௮௨)

கங்கையு மதியுந் தானே கணக்கிலாச் சீவர்க் கெல்லாம்
வெங்கொடும் பிறவி வெப்பம் வீட்டிமெய்ஞ் ஞான நல்குந்
துங்கமிங் கெவருங் காணத் துலங்குமக் கவினோர் கண்டா
னங்கதம் பலவு மிந்தோ டளாவுநன் பருமை கண்டான். (௮௩)

பிறைமதி யொன்ற லாலெம் பிரானரை மதியு மென்று
நிறைமதி யமும்பூண் டாங்கு நிகழ்நுதன் முகமுங் கண்டான்
முறையின்மும் மலமுக் குற்ற முக்குண முப்பு ராதி
பறையநன் றருள றேற்று பாலபுண் டரநேர் கண்டான். (௮௪)

உலகெலா நிறைவி யட்டி யொளிக்கெலா மொளிதந் தென்று
நிலவுறு சுசிச்ச மட்டி நேத்திரத் திரயங் கண்டான்
குலமறை சிவாக மாதி குழாங்கள்வீற் றிருந்தெஞ் ஞான்றும்
விலகுறு தமர்ந்து வாழும் விமலமென் றிருவாய் கண்டான். (௮௫)

பொதுமறை யரிமுன் னோர்க்கும் புகல்பரத் துவங்க ளேனோ
ரதிகரி யாமைக் கெம்மா னருளுப சாரமேயப்
புதர்பிறந் திறும்ப சுக்கள் புகல்பசு பதியே யீச
னிதுமுடி பென்று தேற்று மெழின்மணி கண்டங் கண்டான். (௮௬)

மிடற்றெழு மோசை மூன்று விதமெனுங் குறிப்போ சீறும்
விடத்திலும் புரந்த தோர்மூன் றுலகெனுங் குறிப்போ வீயா
துடற்றுமும் மலவி ருட்டை யொறுத்திடுங் குறிப்போ வென்ன
விடத்துறு மிரேகை மூன்றவ் விருங்களத் திலங்கக் கண்டான். ()

அருளுதும் வருக வென்றுங் கழைத்தலி னெலியா நிற்கு
மிருகமு நசமென் றேந்து மிளிர்தழன் மழுவு முற்றோர்
வெருவுறு வபய மும்பின் வினைகவர்ந் தளிக்கு மாண்பு
மருவுறு மம்பு சாத மலர்க்கர சதுர்த்தங் கண்டான். (௮௮)

உலகெலா முறையிற் றன்பா லொடுங்குறத் தனையொ டுக்கி
நிலவுமேற் பொருளொன் றில்லா நித்தியன் றத்வா தீதன்
மலர்பர சிவனே யென்ன மறைமுடி யறையும் வாய்மை
யிலகநேர் காட்டும் வெண்ணீ றிலங்கெழின் மார்புகண்டான். (௮௯)

அண்டகோ டிகளெ லாமாங் கமர்புவ னேச னெல்லா
மண்டுபல் பொருளெ லாந்தன் மகைகசுவ ரியலே சம்மென்
றெண்டகு மறையெ லாஞ்சொ லீசனே யெவற்றும் வாஞ்சை
விண்டமர் திருத்த னென்னை விளங்குபல் லணிகள் கண்டான் (௯௰)

புரத்தலின் றொழுத்தா லொன்றும் போதுமென் றுபங் டஞ்சொல்
கருத்திணை யெனக்கொமபு கமடவோ டிலகு மீன்கண்
ணரத்தனி மடங்க லந்தோ ணகைதரு கபால மாதி
திருத்தகு முறுப்பிற் றுங்குந் திறமினி துணர்த்தக் கண்டான் (௯௧)

தானலா துலகமில்லை சகமலா தடிமை யின்றென்
றேநவில் சுருதி வாய்மை யிலங்குற வகில மெங்கு
மேனிமிர் தாவி யாபித் தவைவியாப் பியத்தின் மேவுந்
தேனிமிர் கமலத் தண்பூந் திருவடித் துணைகள் கண்டான். (௯௨)

தன்னில்வே றற்ற மர்ந்துந் தானுரு வுருவிற் கேற்பப்
பின்னையா யொருங்கு சாரும் பெரியநா யகிமா தேவி
யன்னையா யகில மீன்ற வமலையாங் கமர்ந்து மேவு
மென்னையா ளமுத நாத னிடத்திருக் கோலங் கண்டான். (௯௩)

வலமிடம் பொலிந்து தோன்றி வளரருட் கோலங் கண்டான்
மலர்தரு மந்த காசம் வழங்கருள் வெள்ளங் கண்டா
னலகிலா னந்த வெள்ளத் தாழ்ந்தனன் கரைபின் காணான்
றலனில்வீழ் தண்ட மாகத் தாழ்ந்தனன் றனையுங் காணான். (௯௪)

பரவச னானான் சிவப் பண்பொரு சிறிதுங் காணான்
வரனரு டாமுன் போந்த வள்ளறன் குறிப்பு முற்ற
வுரனளித் தனன்கொ லென்ன வுணர்ந்தெழுந் தாங்கெம் பெம்மான்
பிரசமென் மலர்த்தாள் போற்றிப் பேணியித் துதிகள் கூறும். (௯௫)

ஒருவனு யுலகை யெல்லா மொழிவற நிறைந்தாய் போற்றி
யருமறை யுபநிடம்போற் றத்துவி தீயபோற்றி
வருபரா பரமெய்ஞ் ஞான வள்ளலே யாவ னத்தின்
மருவிவா ழாதி சேட வரதநா யகனே போற்றி. (௯௬)

நாயக மறைசொன் ஞான ஞாதுரு ஞேய ரூபி
யாயவற் றதீத தூய வகிலமும் விரிந்து நின்றுஞ்
சேயவ வணிய சர்வா சிரயவாம் பிரவ னத்தின்
வாயம ராதி சேட வரதநா யகனே போற்றி. (௯௭)

* அணிகள் - அஸ்தியாதி.

மூதுணர் விப்பி ரேசர் முறைபுரி துரங்க மேத
மாதியால் வழிபட் டேத்து மண்ணலே யனைய வேள்வித்
தீதறு பலன்க ணல்கு தேவதே சரவ னத்து
மாதவ வாதி சேட வரதநா யகனே போற்றி. (௯௮)

விரிகலை யாவமோர்ந்த வித்தக ரெவன்றி யானத்
தொருவுபு கன்ம பந்த முறுவர்தா முத்தி யன்ன
துரியனீ யென்ன வேதந் துதித்திறைஞ் சதீத சூத
மருவனத் தாதி சேட வரதநா யகனே போற்றி. (௯௯)

மிருகண்டு சூனு வொன்றி விதியினர்ச் சிப்ப வன்றே
னருகண்டு மறலை வீட்டி யாசினித் தியமா வின்பந்
தருகண்ட காள வொண்சே தாரமா விபினத் தென்று
மருகண்ட வாதி சேட வரதநா யகனே போற்றி. (௪௦௦)

வனசமா தவன்றன் றேக்கம் வனசமாப் பூசிக் கும்பா
வனசமா ராத னத்தான் மகிழ்வுறீஇத் திகிரி தந்தோய்
வனசமா னங்க டந்த வள்ளலே மாழை சூழும்
வனசமா வாதிசேட வரதநா யகனே போற்றி. (௪௦௧)

தொழில்களைந் துனையன் றின்றத் தொகைவகை விரிய ளப்பின்
றொழிவில வசல னியிவ் வுளவறி வரிதென் றுன்றோர்
மொழியுமெய்ஞ் ஞான னந்த மூர்த்தியாம் பிரவ னத்தின்
வழியரு ளாதி சேட வரதநா யகனே போற்றி. (௪௦௨)

தன்னில்வே றுயர்ந்த தொன்றுஞ் சசாதிக துவித மாகத்
தன்னில்வே றொன்று மில்லாச் சர்வபூ தேச ரேச
மன்னிய வமுத சூத வனத்தன வரத வாச
மன்னிய வாதி சேட வரதநா யகனே போற்றி. (௪௦௩)

போதரு மெவர்க்கு மோர்காற் புரிகம மாத்தி ரத்திற்
காதர பவார்ண வத்தைக் கடப்பிக்குங் கருணை வள்ளால்
பேதறு சர்வ சித்திப் பிரதனே யிரதக் கானின்
மாதவ வாதி சேட வரதநா யகனே போற்றி. (௪௦௪)

நித்திய நிர்வி கார நிராலம்ப நிராம யேச
சத்திய ஞான னந்த தற்பர சாதுர் வேத
துத்திய நிமல சர்வ சோபண சூத கான
மத்திய வாதி சேட வரதநா யகனே போற்றி. (௪௦௫)

அனகனினக் கென்றுநம தருஞ்சொருப சிவஞான வாக்க மோங்க
பனகபதி நீயீண்டுப் படர்ந்தமுத னமைக்கண்டு பணிந்து போற்றி
நினகநெகிழ் தைமதியி னிறைமதியிற் குருவார நிலவு நாளெம்
முனகமுரு கியவிரிவின் முறைபூசா திரவியங்கண் முழுது மீட்டி. (ககச)

வழிபடுவோ ரிகபோகம் வழுவாது முழுதார்ந்து மரபின் வாழ்ந்து
நழுவரிய தனிவீடு நண்ணுகநீ மேலுமினி ராச சூட
முழுமணிவேந் தனைக்கொண்டு முறைநைத்தி ரோற்சவமிம் மூதூர்க்கென்று
மெழில்வளர்பூ ரணைமுடிவா யியல்விப்பா யென்றுமினு மியம்பு மாசோ. ()

நமதருளா லுலகுபூ டணமாக யோகசூத் திரநவின்று
சமைவுறநின் பெயரினிற்பா தஞ்சலியென் றதற்கியற்பேர் சாற்றி மேலுஞ்
சமைதருமா தேற்றுவியா கரணமகா பாடியமுஞ் சவினசெய்தே
யமைவுறுமா சாசுவத மாயகிலப் பிரசித்தி யாகவைப்பாய். (ககரு)

நம்முரிய சொரூபவிய னன்குணாந்தோ ரானேனே நவின்ற துண்மை
யெம்மிலவ னபேதமென வெண்ணுதியா னினக்கவனே யெம்மை நல்கும்
மும்மலமோ சனகுருவா முன்னுபதே சாதியருண் முதிய ஞானை
னம்முறையா லும்மவன்பாங் கமர்ந்துவழி படலேற் கமைதி யாகும். ()

ஆதலினு னவனையடைந் தனையகுரு பத்திவழா தமைந்து வாழ்தி
கோதறவீற் றினினமது குளிர்கமல பதநீழல் கூடு கிற்பாய்
போதுமெனவருள்புரிந்தப் புனிதசுயம் பிலிங்கநடுப் புகுந்து வெற்பின்
மாதொடுமந் திரநாதன் மறைந்தவீற் றிருந்தனனிவ் வையம் வாழ. (ககஎ)

பின்னருளா லகிபதிசெம் பியற்கூவி யமுதேசன் பெரிய வன்னைக்
கன்னமகோற் சவம்விதியி னாற்றுவித்தாங் ககல்பிரிவிற் காற்ற னாகிப்
பன்னருளா னையுமறக்கும் பான்மையதோ வென்றிரண்டு பாங்கு முள்ள
மன்னவொரு வாறமுத வள்ளலைத்தாழ்ந் துள்ளமெலாம் வைத்திட்டாங்கே

வெற்றுடல்கொண் டேகுபுபால் வீரையிற்றன் குரவனடி வீழ்ந்து முற்றுஞ்
சொற்றனையன் பணியாற்றித் தன்னினனென் றருணந்திசொலக்கேட்டின்ப
முற்றசனற் குமரமுனி யுழுவலன்பா லடிகளினி யுதகவோதன்
முற்றவண்முன் பெற்றபயன் சொற்றருள்கென் றிறைஞ்சிடவத் தூய நந்தி.

வேறு.

மேலினி தருளின னென்று சூதன்முன் மேலிய முனிவா ரன்பு கூர்தர
மாலறு கதைபினு மங்க ளோதுறு மாசிறி சரிதமி துந்து மாதர
மேலுற வினவினர் நன்ற கூறின ரேவரு மிசுசுக மென்ப யாவையும்
வாலிதி னுசுருபு பின்பு மாபதி வார்கழ லடிசூழ லொன்றி வாழ்வரே. (கஉக)

ஆதிசேடன் சிவார்ச்சனைச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் கஉக.

குடபதி கேண்மதி யிவ்வருட் குறியைநி னுடலள விடையரு
திடர்தப மிடையுப கரணமுற் றியைதர நியதியி னொடொறுந்
திடமிகு மனிமிக வுளநனி திகழ்தர வருச்சனை முற்செயக்
கடவையென் றெதிரிறைஞ் சவனிரு கரமிசை யருளினன் மாதவன். (உச)

அரிபிர மாதிய தேவரு மருமறை யாதிய நூல்களுந்
தெரிவொழிந் தன்மைசொற் றேலிடச் சிவசிவ புணர்பவ ருணர்வையு
மொருவியெந் நெறியினு மதீதமா மொருபொரு ளிருகரத் தொருமையின்
மருவியிங் கெளிதுற வெப்பெரு மாதவ கோடிகள் வாய்த்தனன். (உரு)

வேறு.

என்றுவெழு மாதர மீதுறவவ் விலிங்கேசனை யாசிரி யன்சொல்வழி
மன்றுமனுப் பாவனை யாதியெலாம் வழுவாதருச் சித்துப தேசமுறைத்
தின்றுவற நீள்குறி நல்கியரு ளியதேசிக பூசனை நேர்புரியா
விண்ணீண்மணி யாதிய வாயதிர வியநேர்தொழு காலுறை நல்கியரோ.

தொழுதாங்கெழுந் தஞ்சலிசென்னியி னிற்சூடித் திருமுன்னுறநின் றனனம்
முழுமாதவ தேசிக னவ்வருணன் முகநோக்குபு கேண்மதி நீர்க்கிறைவ
வழுவாதமர் தாபத சாபவினை மாற்றுஞ்செயல் போற்றுதல் வேண்டுமுனக்
கெழுவாரிதி சூழ்புவி யின்கணலா லிவணீசெயி னும்பய னின்றதனால். ()

புகுபாரினும் பாவன மாவனமே பொருத்தம்மெளி திற்பய னுமுடனத்
தகுமாவனங் காவிரி யாமியதி சையின்மாமறைக் கானன மேற்றிசையிற்
றுருகுயோசனை யோரிரண் டினுளதச் சூதாரணி யத்தமர் தூமணியைச்
சுகபோதக ரூபவ நாமயனைத் தோன்றுத் துணை யாகும நாதியனை. (உஅ)

படிவாழு மணிச்சுடி கைப்புனித பணிராசசற் பூசித பாக்கியனை
யடியாருளத் தாரமு தச்சுவையை யமுதேசனை யளிற்றை மனமுருகக்
கடிமாமல ராதிவி ராயவுப கரணம்பல வோடள வாமணியா
லொடியாதயர் பூசனை யாற்றுதிமே லுவனேர்சிவ லிங்கமு முன்பெயரால்.

மாபாற்பிர திட்டை புரிந்திறைவன் மகிழ்வேள்வியும் போற்றுதி யிவ்வகைநீ
புரிவாயெனிற் சாப நசித்திடுமப் பூசைத்திருத் தொண்டது வன்றியுமே
லொருவீடுமளிக்குமெனப்புகன் றுனுதகேசனெழுந்தெதிர் தாழ்ந்திறைஞ்சிப்
பெருவாழ்வு தரப்புகு சற்குரவ பெரியோய்சின திருவிளை யாக்கலியை. ()

எவர்மாற்றுநர் சொல்வழி நற்பணின்வாக் கிடையேழைவிண் ணப்பமொன்
றையதிருச், செவிசாத்திய வனையம கற்றியருள் செயவேண்டுவ லென்னவ
தென்னையெனச் சிவசாத்திரம் யாவையு ஞானமலர்ற் றிகழ்மோக்கமின்
றென்னவச் சூதவனத், தெவமாற்றமு தேச சுயம்பிலிங்கத் திறைபூசனை
நன்றருண் மென்றதேனே. (ஙக)

அழலிணை மடிதனின் முடிதலீ தலதிலெ யெனகிறை யார்கலி
விழலுறு மவர்களை யறிவெலாம் விழலுற வொற்றுவ ரார்ப்பில
வழியவ னுறப்புரிந் தன்னிய மகமகங் கொதித்தெழு மாறென
வெழவழ லாகுதி யாதிசெய் தெண்ணிய செயன்முடித் தனமெனு. (அ)

முறுகிஙின் றெழுசெருக் கறிவினை மூடவம் மூடபுத் தியினிலவ்
வுறுவர்க டமையுரை யமர்பினு முளுற்றுட; நீமெமை வெல்லுநா
ளறுதியிங் கமர்தனுங் கடனெனு வவர்தகை யறிவிலி தகைதியிஞ
னுறுவது தவிர்வதெவ் வருந்தவ வுறுவரு முறுவரன் றென்பதால். (௯)

பின்பவ ணமர்தரு ககோளர்தம் பெருந்தவ மோருரு வாயினோ
னின்பமிக் கருமறை யாதிய யாவையு முணர்ந்துமெய் தேர்ந்துளான்
றன்பெய ரட்டவக் கிரனெனுந் தாபத னுபதுத் தாரண
மென்பஃ தேனையர்க் காற்றுவா னின்றவற் குறுதுயர் பொறுக்குமோ. (௧௦)

தாதைபா தலத்தினை செயறெரீஇத் தரிப்பற வுளமிகு பதைப்பொடு
மோதுமக் கணமவ னுற்றெதி ரொருசொலி னச்சமர் வெற்றிகொண்
டேதறு தாதைமு னுகவங் கிருந்தவ ரிருந்தவர் யாரையு
மேதினி புகுந்துதங் கியதிகண் மேவிய வமர்கென விடுத்துமேல். (௧௧)

குடபதி கேண்மதி பாழ்மதி கோண்மதி யாதுகொண் டேமதி
மடமைய ரெனவதி பாதக மலிவினை புரிந்தனை யாதலி
னுடனறி விழந்தனை பித்தனு யுடலழி குருபமுற் றுலைதரக்
கடவையென் றினைதரு சாபமுன் கழறின னேகினன் றாதைபின. (௧௨)

வருணனவ் வழியறி வழிந்துடன் மலினமுற் றலைகிலை மனைமுனோர்
தெரிபழி மனத்தரிப் பாதகந் தீர்வதென் றென்றுளைந் தினைந்தன.
வொருவிலிப் பழிதெற நீடுநா ளுழலுமவ் வருணன்முற் புண்ணிய
முருவினுற்றெனவிரூபாக்கனென்றொருபெருமுனியவ னுற்றுளான். (௧௩)

எதிர்தொழன் முதலுப சாரமின் றிருந்தன னறிவழி குடாதுகோ
னதுதெரிந் துடன்விரைந் தவன்மனை யமைச்சரம் முனிவர னடிபணீஇ
முதுதவ முனிவபர் சிகாமணே முழுதுநி னடியல தாணிலேங்
கதுவென நசிக்குமா மேதையோர் காட்சியெத் தீமையு மென்பரால். (௧௪)

அடிகளை முற்றவப் பெரும்பய னுகவிங் கடிதொழப் பெற்றனங்
கடிகவெம் பதிமதி மயலெனக் கழறுவ தென்னினி யேழையே
மொடிவற முழுதுணர்ந் தருளெனு மொண்கல னணிகல னெனக்கொடே
னெடிதருள் பெருந்தகைக் கெனப்பினு நேர்பணிந் தனரடிக் கடியரோ (௧௫)

எழுமினும் மிறைபுரி பாதக மெவற்றினும் பெரிதது பிரமண
ருழியவ மானஞ்செய் துற்றதிவ் வுறுபழி யகற்றரி தாயினும்
வழிபடு நும்பொருட் டிரக்கமும் வளர்ந்தெழு முளநனி யாதலி
னொழிதரு முபாயமிங் கோதுது முணருதி னெனப்புனு மோதுமால். (கசு)

நுமதிறை மனமழி சாபமு னுவன்றரு டாபத னியாவையு
மமைதர முழுதுணர் தாயனவ் வட்டவக் கிரப்பெயு ரண்ணல்சொ
னிமிர்பெரு வலியின தாதலி னிறைபரி காரமுற் றுறினலா
தெமதியல் வலிகொடு மாற்றரி திப்பரி காரமு மிவணலால். (கஎ)

வினையர் புரிதரி னிரிதரா திவன்மது பானவுன் மத்தனு
யினரிந் திதசபா பிட்டனு யினனறி வுற்றல தியல்வுரு
தூனமி லீனயதிப் பாதலத் துஞற்றுதன் முறைமையன் றம்புவி
மேனல மாதல மீதுறு விதிமுறை புரிவதென் றேதிமேல். (கஅ)

மறைமலர் புரைதன கரமவன் மத்தகந் தனின்முறை வைத்தனன்
கரவிலவ் வத்தமத் தகசய்யோ கப்பெருந் தீக்கையி னுக்கமிக்
கொருவுணர் முழுதுறப் பழுதில்வ் வொருமுனி யிருதொழு திருவடி
சிரசுதை வரவிழுந் திறைஞ்சுபு தீயவிப் பெயனை நீயலால். (கக)

அருள்பவர் பிறரில ரரணின தடியல திலெயென நமந்துள
முருகிய மேதகு சீதள வுதகமென் பதமிசை யாட்டியப்
பொருவில்பா தோதகஞ் சென்னிவாய்ப் புரோக்கணு சமனமு னியற்றுபு
மருமலர் மதுவருக் காதியான் மரபினி லருச்சனை யாற்றினன். (உ0)

பூசனை புரிந்துட னஞ்சலி புரிநெதிர் தொழுவரு ணுனன
நேசமு னீடிய நோக்குபு நிறையருள் செலுத்தவப் புனலிறைக்
காசறு முத்தம மந்திர மாற்றினின் வகித்திடு மாற்றன்முன்
மாசற நல்கிவெண் ணீறுமெய் வயங்குமுத் தூளன மாமனு. (உக)

திறன்மலத் திரையமொய் நசித்தொளிர் சிவத்துவப் பேற்றினை யளித்திட
லறிகுறி யெனுந்திரி புண்டர மணிமனு நியாசங்க ளிருடிகள்
குறியதி தேவதை சந்தமுன் கொளவுப தேசமுன் றந்துபின்
மறைநடு மத்தியின் மத்தியின் வயங்குயி ரக்கர பஞ்சகம். (உஉ)

பிரணவத் துடனுப தேசமும் பிறங்கிய புரிந்துதன் னேக்கினுற்
கரிசுமுற் றொழிந்தொளிர் முத்தனுய்க் கவினுறு மவனுழி மேலுந்த
னருள்விரி தலினுயர் சிவாகமத் தவிர்முறை யிந்திர நீலமா
பரசிவ லிங்கமொன் றனையவண் பதிட்டைசெய் தருச்சனை புரிந்துபின். ()

குடபதி கேண்மதி யிவ்வருட் குறியைநி னுடலள விடையரு
திடர்தப மிடையுப கரணமுற் றியைதர நியதியி னொடொறுந்
திடமிகு மளிமிக வுளநனி திகழ்தர வருச்சனை முற்செயக்
கடவையென் றெதிரிறைஞ் சவனிரு கரமிசை யருளினன் மாதவன். (உச)

அரிபிர மாதிய தேவரு மருமறை யாதிய நூல்களுந்
தெரிவொழிந் தன்மைசொற் றேலிடச் சிவசிவ புணர்பவ ருணர்வையு
மொருவியெந் நெறியினு மதீதமா மொருபொரு ளிருகரத் தொருமையின்
மருவியங் கெளிதுற வெப்பெரு மாதவ கோடிகள் வாய்த்தனன். (உரு)

வேறு.

என்றுவெழு மாதர மீதுறவவ் விலிங்கேசனை யாசிரி யன்சொல்வழி
மன்றுமனுப் பாவனை யாதியெலாம் வழுவாதருச் சித்துப தேசமுறைத்
தின்றுவற நீள்குறி நல்கியரு ளியதேசிக பூசனை சேர்புரியா
வின்னீண்மணி யாதிய வாயதிர வியநேர்தொழு காலுறை நல்கியரோ.

தொழுதாங்கெழுந் தஞ்சலிசென் னியினிற்சூடித் திருமுன் னுறநின் றனனம்
முழுமாதவ தேசிக னவ்வருணன் முகநோக்குபு கேண்மதி நீர்க்கிறைவ
வழுவாதமர் தாபத சாபவினை மாற்றுஞ்செயல் போற்றுதல் வேண்டுமெனக்
கெழுவாரிதி சூழ்புவி யின்கணலா லிவணீசெயி னும்பய னின்றதனால். ()

புகுபாரினும் பாவன மாவனமே பொருத்தம்மெளி திற்பய னுமுடனத்
தருமாவனங் காவிரி யாமியதி சையின்மாமறைக் கானன மேற்றிசையிற்
றெருகுயோசனை யோரிரண் டின்னுள தச் சூதாரணி யத்தமர் தூமணியைச்
சுகபோதக ரூபவ நாமயனைத் தோன்று த்துணை யாகும நாதியனை. (உஅ)

படிவாழு மணிச்சுடி கைப்புனித பணிராசசற் பூசித பாக்கியனை
யடியாருளத் தாரமு தச்சுவையை யமுதேசனை யளிற்றை மனமுருகக்
கடிமாமல ராதிவி ராயவுப கரணம்பல வோடள வாமணியா
லொடியாதமர் பூசனை யாற்றுதிமே லுவணேர்சிவ லிங்கமு முன்பெயரால்.

மரபாற்பிர திட்டை புரிந்திறைவன் மகிழ்வேள்வியும் போற்றுதி யிவ்வகைநீ
புரிவாயெனிற் சாப நசித்திடுமப் பூசைத்திருத் தொண்டது வன்றியுமே
லொருவீடுமெளிக்குமெனப்புகன் றுனுதகேசனெழுந்தெதிர் தாழ்ந்திறைஞ்சிப்
பெருவாழ்வு தரப்புகு சற்குரவ பெரியோய்சொன் திருவினை யாக்கலியை. ()

எவர்மாற்றுநர் சொல்வழி நற்பணின்வாக் கிடையேழைவிண் ணப்பமொன்
றையதிருச், செவிசாத்திடெ னையம கற்றியருள் செயவேண்டுவ லென்னவ
தென்னையெனச் சிவசாத்திரம் யாவையு ஞானமலாற் றிகழ்மோக்கமின்
றென்னவச் சூதவனத், தெவமாற்றமு தேச சுயம்பிலிங்கத் திறைபூசனை
நன்றருண் மென்றதேனே. (ங௧)

எனவேவரு ணன்புகல் கின்றதுகேட் டிறைகூறுமுன் னூலுரை சத்தியமே
யனஞானமப் பூசனை யன்றியுரு தகத்தும்புறத் தும்புரி பூசனையான்
மனதூய்மையச சுத்திப ரம்பரையின் வருமாண்சிவ ஞானமப் பூசனையே
முனமேதுவென் றோதலுஞ் சத்தியமே முத்திக்கது பரம்பரையேதுவதாம்.

அவிரோதமுன் சொன்ன துங்கேட்டதுமென் றறிநீபினுமத் தெளிவோதுதுஞ்
சிவபூசையொடம் பியவெத்தவருஞ்சிவன் சுழிதேகமென் றோதுமறை[கேள்
யவமேயவை யுத்தம பூசனையா மதுவேசிவ ஞானமென் றோருதியச்
சிவபூசையுண் மந்திரம் பாவனை தூச செயறந்திர மாதிய வாயவையெலாம்.

முன்னூ லுணர் வன்பருள் சாந்தமுதன் முற்றுங்கொளுமுத்தமசத்துவனு
யன்னோர்மிடற் றேனருள் புக்குநன் றாலறிவானதனருமைபல்பெருமையெ
மென்னேயினிப் பூசனையேயலதொன் றிறவாதவின் பீவதுமுண்டுகொ[லா
வின்னேகர மெல்லயி னத்துவித விரும்போகமப் பூசனை யேதரலால்.[லோ

இதன்மேலுமெய்ப்பேறுயிர்க்குள்ளதுசொலெந்நூலுமிசைத்திலதுண்டென
றதையேபுராதத்துவிதானந்தவாழ்வை டவாவெனவோருதியீதலதுந்[வென்
துதிசேர்சிவ மாதலை வாசமுறீஇச சுயம்பீசவ ருட்குறி நேர்தொழுதி
யதிமேவினுமுத்திபரம்பரையினருண்மென் றுணருண்மையிதையமுறேல்.

அல்லாமலு மத்தகு சூதவனத் தமுதாகர சுயம்பிலிங கேசனையாங்
கெல்லாருமுக் காலமு நேர்தரிசித் திரியாதுவ சித்திடு சீலனெவன்
மல்லாரவன் றேகம்வி டும்பொழுதம் மனுநாயகன் றேவி யொடும்புகுநதே
வில்லார்தரி சனமளித் தொப்புயர்வில் வீடுந்தரு வானிது நிச்சயமே. (கசு)

இவ்வாய்மையை யோர்வறி னித்தலமேயி றுங்காறும்வசித்துமெனும்விரதஞ்
செவ்வேகொடுசாந்தமன் பாதித்தினந்தினமோங்கியவிட்டலிங்கார்ச்சனையோ
டவ்வாரமு தேச தெரிசனமைந் தெழுத்தின்செபந் த்யானமுன்னையபுரீஇத்
தெய்வாதிப ரொருண் மூழ்குநர்க்கத் தேவேச னளித்தல் விரிப்பவரார்.(கஎ)

வேறு.

கேண்மி யாவுத கேசநாம் விரிப்பதென் கிளத்துஞ்
சேண்மு னேகுமம் மாவனஞ் சென்றமு தேசன்
றண்மு னேபணிந் துன்பெய ரிலிங்கதா பனமும்
வாண்மு னீலலிங் கேசவான் மார்த்தபூ சனையும். (கஅ)

மாபின் வேள்வியுஞ் செயினட்ட வக்கிர முனிவன்
றாமுன் னீளிடர் புரிந்துள சாபமோ சனமாம்
வாத மெய்ச்சிவ ஞானமா மகோததி மூழ்குந்
தாமு மாமவ னுறலொரு தலையெனச் சாற்றி. (௩௯)

அமல னும்விரூ பாக்கமா முனிவா னாகன்றன்
சமல நீக்குமத் தாபத முனிவரன் றனைதாட்
கமல மண்புறத் தாழ்ந்தருந் துதிபுரீஇக் கனிந்து
நமல நீப்பதித் தலமல திலையென நயந்தான். (௪0)

துணிவு கொண்டெழும் வருணன்முன் சூழ்பரி வாரந்
தணிவில் பற்பல பொருட்குவை புரோகிதர் தம்மோ
டணிசி றந்ததன் பத்தினி சகிதனு யனைய
பணித லத்தினும் பிலத்துவா ரத்தின்மேற் படரும். (௪௧)

பிலத்தின் மேல்வரு மவன்முன மருமையிற் பேணு
நலத்தி னத்தகு பாவன மாவன நாமத்
தலத்தி னோர்தடத் தெழுந்தன னத்திருத் தடமுன்
புலத்தின் மேதகு கௌதம முனிதரு புவனம். (௪௨)

அனைய தவ்வமு தேசலிங க த்தின தவாசி
தனிலொர் முப்பது விற்கிடை தூரத்திற் றன்பா
லனக சானவி யாகுமா தீர்த்தமுற் றடுத்தே
யினிது நித்திய வாசஞ்செய் தறத்தனி யிலங்கும். (௪௩)

தேவ தீர்த்தமென் பெயர்பிர சித்தமா மனைய
வாவி மேற்றன மனைபரி வாரமோ டெழுந்த
சீவ னுதிபன் மாபினத் திருத்தங்தோய்ந் தார்வ
மேவ நித்திய நியதிகண் முடித்துமே ணிலவும். (௪௪)

மணியி லிங்கவான் மார்த்தபூ சனைமுறை வயக்கிக்
கணித மில்லுப கரணசங் குலத்தொடுங் காந்தை
பணிச னங்கள்பின் வரச்செலீஇப் பணியணி வேணித்
திணியி ருட்களத் தமுதிறை சினகரத் திருமுன். (௪௫)

தூல லிங்கமாங் கோபுர துவாரத்தி னிருபாங்
கேல வைங்கர னறிரு செங்கர னெனுமப்
பாலர் பைங்கழன் முறைபணீஇப் படர்ந்துகோ புரத்துட்
சால வந்ததி காரநந் தீசர்தாள் சார்ந்து. (௪௬)

படியு றப்பணிந் தட்புகுந் தருள்பெறப் பரிந்து
விடைய ளித்தருள் கெனப்பராய் வேண்டுகொண் டடுத்தாங்
கிடப நந்திதாள் பத்திர விலிங்கநே ரிறைஞ்சி
முடியி னஞ்சலித் தாறிரு முறைவலம் புரிந்து. (௪௭)

இரவி யாவினு மிக்குய ரிமாசலை யெமையாள்
பெரிய நாயகி திருமுனம் பெருகுமன் புய்ப்ப
வருண்மு னீர்த்தெழ விருவிழி யருவிநீர் வெள்ளம்
சொரிய வுள்ளுறநீ டுயல்லொழிற் றிருவுருத் தோற்றம். (௪௮)

கண்கு ளிர்ப்பநேர் கண்டனன் றண்டெனக் கடிதே
மண்கு ளிர்ப்பவீழ்ந் துயிருணர் வொழிபா வசனு
யெண்கு ளிர்ப்பவா னந்தவா ரிதிமிதந் தேறிப்
பண்கு ளிர்ப்பநே ரெழுந்துநின் றின்னணம் பராவும். (௪௯)

அகில மீன்றரு ளன்னைசே யறிவிலாச் சிறியேன்
றகையின் மைந்தர்க்கே நிர்க்கதி நினைந்துளந் தயைகூர்ந்
தகல்வு றுதளிப் பதிலனைக் கார்வமே லென்ப
புகலி லேழைநான் புகல்வதெ னென்றெதிர் போற்றும். (௫௦)

வேறு.

மலப்பகை யொன்றே சீவர் மாட்டொரு வாது டற்றுந்
தலைப்பகை யதனை மாற்று தலைத்தலை யாவ கித்தா
மலைத்துமென் றுளங்க றுத்தம் மலவிருள் வடிவே தான்கொண்
டலைத்தென நெறித்தொப் பெல்லா மசற்றுகா ரளகம் போற்றி. (௫௧)

இருண்மல வெப்ப நீக்கி யின்னருட் டண்மை யாவிக்
கருள்வது தெரிக்கு மெண்ணு ளவிர்மதி யளிசம் போற்றி
தருமலக் காடு லர்த்தித் தகித்துமென் ஞானப் பைங்கூழ்
பெருகிய வமுதம் பெய்து பேணுமுக் கண்கள் போற்றி. (௫௨)

துக்கதுர்க் கந்த நீக்கிச் சுகமெனுஞ் சுகந்த மோந்தே
யொக்கவா ருயிர்முற் றுய்வா னுயிர்ப்பெழு நாசி போற்றி
தக்கசொல் லமுத நாதன் றடஞ்செவி வழியே யுள்ளம்
புக்குத ராண்டப் பைங்கூழ் போற்றெழிற் றிருவாய் போற்றி (௫௩)

சமர்புரந் தகித்த மூரல் சமழ்ப்பவாங் கவற்கும் பேரின்
பமைவிலா ரமுதம் வாக்கு மணிமணி முறுவல் போற்றி
நிமலனே காந்த ளுக நிகழ்த்துப தேச வாய்மை
யமுதுல குயமடுக்கு மஞ்செவித் துணைகள் போற்றி. (௫௪)

தெண்ணிறை மதியான் ஞான தேசமுற் றளித்த றேற்றுந்
தண்ணிறை மதிமு கத்தின் சயம்பிர காசம்போற்றி
வண்ணவான் மடிமு லேப்பான் மானமெய்ம் முகநிறைந்து
கண்ணிரு மதகிற் பாயுங் கருணையா ரமுதம் போற்றி. (ருரு)

உருவுக டோறும் வெவ்வே றுயிர்க்குயிர்க் குயிர்சா னேயாந்
தருணமங் கலப்பூண் டாங்கு தன்னிகர் கண்டம் போற்றி
யருள்பர 'வபர ஞான மாருயிர்க் களிப்பப் பூரித்
திருமணி நீல மூடி யிசைத்தபொற் றசும்பு போற்றி. (ருசு)

ஆயிர கோடி யண்டத் தாவிமுற் றெவ்வோர் சூலின்
மேவிய பெற்றுஞ் சற்றும் விகாரமி லுதரம் போற்றி
தூயசிற் றுதரத் தாவித் தொகையினைப் பிணிக்கு மாற்ற
லோயிருள் புறத்தி னேடு மொழுக்கம்போன் மூரோமம் போற்றி.

இருதய கமலங் கீழ்நின் றெழும்புநீர் நிலேய வாவி
மருவு*மா வர்த்த மேயாம் வலம்புரி நாபி போற்றி
புரகரன் சேமத் தேரிற் பொலிகடி தடச்சீர் போற்றி
யிரதமே லரம்பை யாக வியைகவா னிணைகள் போற்றி. (ருஅ)

பருமுலேக் குடைந்து கீழ்வீழ் பந்தினைக் காத் சேய்போ
லருணனி நிறுத்தி வைத்தாங் கவிர்முழந் தாள்கள் போற்றி
யிருவரால் வளப்பு வெள்ளத் திலங்கமேனர் கணைக்கால் போற்றி
பெருகெழில் முதிர்சம் பீரம் பிளவுசெய் பரடு போற்றி. (ருகூ)

ஆமையொவ் வாமை மாமைக் கைந்தொடுக் கியும்வி ரித்தும்
† போமெனப் பலகா ளேக்கும் புறவடி விரல்கள் போற்றி
தூமறை யுபநி டங்கள் சுமாதிடப் பெறுத ரற்றத்
தேமிகன் புளத்தி லங்குந் திருவடிக் கமலம் போற்றி. (சுo)

உரைசெயி னகிலபோக முடனளித் தி வீடு நல்கும்
பெரியநா யகியென் றேதும் பெருந்திரு நாமம் போற்றி
கிரிசைநின் னருளி னல்லாற் கிட்டரு மமுத நாதன்
றிருமுனுற் றருண்ம டுத்தல் சிறியனேற் குறுவ துண்டோ. (சுக)

---

* ஆவர்த்தம்-நீர்ச்சுழி. † போம் என்பதில் வினவிசை ஓகாரந் தொக்கது "செப்புதற்காமெனின்" என்பதிற்போல்.

சேயரை யணிய ராகச் சேர்ப்பது தங்கை பாங்கத்
தாயருட் கடனே யேழை சாற்றியும் பிழையி ழைத்தேன்
றீயவெஞ் சாப நோயாற் றியங்கிய சிறிய நாயே
னுயவிப் பிழையு மாற்றி யருடியா லன்னே யன்னே. (௬௨)

என்றுமுன் றுதித்துப் பல்கா லிறைஞ்சியா ரருள்பெற் றேகி
மன்றறுன் றிதழி வேணி மந்திர நாதன் கோயில்
சென்றுநந் தீசபாத தெரிசன முறைசெய் தப்போய்
நின்றொளி ரமுத ரூப னிறையருட் குறிநேர் கண்டான். (௬௩)

கண்டனன் காண மொன்றுங் கண்டிலன் றன்னைக் காணுன்
றண்டெனப் படிந்தா னந்த சாகர தனிதிளைத்துக்
கொண்டெழு சிவானு பூதி கூர்பர வசனு யொன்றிப்
பண்டுணர் வந்த ரிப்பப் பைப்பயக் கரையி வர்ந்தான். (௬௪)

அண்ணலின் னமுத மேனி யம்பகங் குளிர நோக்கி
யுண்ணெகிழ்ந் துருகச் செங்கை யுச்சிமேற் குவிய நேர்நின்
றெண்ணரும் பிறவி தோறு மெய்பெருந் தவம்பு ரிந்தேன்
கண்ணெதிர் காணப் பெற்றேன் கருணையா ரமுத ரூபம். (௬௫)

எனமுனந் துதிய னேக மிரைத்தடிக் கடியி றைஞ்சி
மனமுவந் தமுத லிங்க வரதனுக் காதி சேடன்
புனைதிருப் பணிக ளோடம் பொன்மணி யணிக ளாதி
நனிவிளை நிலங்க ளாதி நல்குபு பெரும்பே றுற்ற. (௬௬)

அருட்டிறன் முற்றுங் கேட்டாங் ககமகிழ் வகையன் புந்தப்
பொருட்டிறன் முற்று மீட்டிப் புனிதமா சியாச மாதி
தெருட்டுச் ருருத்தி ராதி செபயகா வயிட காதி
மருட்டெறு நிவேத னாதி வயங்கவா கமநூன் மாண்பால் (௬௭)

போற்றுமா பூசை மாசிப பூரணை யாய வாரா
ளோற்றிவ ரமுத நாதற் கியற்றுபு வேண்டு கோட
லாற்றினன் பதிநூ லோதி யாய்ந்தமைந் தன்பின் வாய்மை மக்
தேற்றுவிப் பிரர்க்குத் தான திறப்பட மகிழ்ந்த ளித்தான். (௬௮)

இன்னண மமயி னுளு மியற்றியத் தலந்த வாச
மன்னுறக் காலந் தோறும் வந்தவந் தமுத நாதன்
றன்னடி பணிந்த மர்ந்து சாருநாட் பிலத்தி னின்று
முன்னெழீஇப் போந்த வாவி முதுதட மதனி லேகி. (௬௯)

சாலைநூன் மரபிற் கோலச் சாற்றுறும் வேள்வி யொன்று
மாலற வியற்றி யார்வ மலிதிருப் பணிகள் பல்ல
காலொளி யணிகள் பல்ல கவினுறப் புரிந்த ளித்து
வாலிய வமுத நாதன் மாபூசை மேன்மேன் மல்க. (எ0)

புரிநெதி ராண்டு மாசிப் பூரணை நாளி லன்ன
வரந்தரு பூசை முற்றி மறையவர் வெறுப்ப நல்கிப்
பரிந்தெதிர் நோக்கி யந்தப் பார்ப்பனர் குழாத்தை யென்பா
லரந்தை செய் சாப நீக்கி யருண்மினோ வென்று தாழ்ந்தான். (எக)

வேறு.

ஆங்கது வினவிய பனவரொலா மார்கலி நாயக கேண்மதியா
லீங்கமு தேசசு தரிசனநிற் கெப்பொழு தெய்திய தப்பொழுதே
நீங்கருந் தீவினை யாவுமுட னீங்கிய மாமுனி சாபவினைத்
தோங்கழி பாக்கினி வேண்டுவதென் றாயவ னாயினை நீயெனவே. (எஉ)

ஓதின ரோதுமச் சொன்முடிமு னும்பரி னெம்பெரு மானருளா
லேதறு மேற்றிசை காவலகே ளெம்முன மெய்திய வப்பொழுதே
யேதமு னியற்றிய சாபமொன்றோ வெப்பவத் தொப்பறு வெப்பிடருந்
தீதற முற்றொருங கற்றனவாற் றிடமிது நின்மல னாயினை நீ. (எங)

இன்னினி யெண்ணிய காமியமுற் றெய்துபு வாழ்ந்திருந் தீற்றினினஞ்
சின்மய ரூபமெய்ஞ் ஞானமுறீஇத் திகழ்பர மோக்கமுஞ் சேர்கவெனாத்
துன்னரு மின்னமு தொழுக்கெனவே தொடர்புற வெழுந்தன தூமொழியப்
பன்னச ரீரத னிருசெவியாற் பருகின னுருகினன் பாடினனே. (எச)

ஆடின னோடின னீடியபே ரானந்த வாரிதி மூழ்கியெழுந்
தீடிரி பீடைகள் சாடியெளி யேனையு மென்றுகொ ளத்தகுமோ
பீடிரி தீவினை புத்தியுறப் பேணினன் றாற்றிய பீழையினேற்
கேடவிழ் சுவன்னசு வேணியமு தேசனிங் கருளிய தென்புகல்கேன். (எரு)

எந்தைசெ யுபாரு ளென்றாமோ வெத்தகை யோர்க்குமியம் பரிதென்
றந்திலவ் வம்புதி நாயகனவ் வமுதலிங கேசன்மெல் லடிக்கமலஞ்
சிந்தையுஞ் சென்னியுந் திகழ்தரமுன் றிருத்தக வீழ்ந்தடிக் கடியிறைஞ்சி
முந்துபஃ றுதிபுகன் றரிதுசெலீஇ முனமிரு கண்டரு டனையனவண். (எசு)

நிறுவிய வருட்குறி யவாசியினி னிலவுதன் பெயரினி லோரிலங்க
முறுவிதி வழியினிற் பதிட்டைபுரிந் துளமிகு மளியுறப் பூசனைசெய்
தறிவுள மமுதலிங் கேசனடி யமைந்துறப் புறம்புகுந் தகமுழுதும்
பறிகொடுத் துழுமவன் சுவாசிரய பாதலம் போந்தமர்ந் திருந்தனனால். (எஎ)

ஆதலந் தனிற்சிவ சிந்தனையோ டனைத்தையுஞ் சிவமெனக் கண்டமையும்
பரசிவ ஞானமொ டமர்ந்தனனைப் பணிக்கட லரசைவிட் டொழிசாபம்
வருபயங் கரவுரு வாயட்டா வக்கிர மாதவற் றொடர்ந்தன்று
லொருவரு மனையவெஞ் சாபத்தீ யுருவினை யெதிர்தெரிந் திதுவென்னே.()

எனநனி கருதிமெ யுணர்ந்தன்றே னெத்தகு பாதக வினையாவுந்
தனைநிலை புகுமுனந் தொலைத்தின்பே தருவது சேதர வடவியென் [தாங்
மனனுறத் துணிந்தொரு நொடியாங்கே வந்தறன் வழங்கிவெண் ணீறணிந்
கினிதெழுத் தைந்தெணி யமுதேச னிணையடி முறைபணிந் தெடுத்தேத்தி.

அருசலிங் கேசபர சிவபாகத் தருட்குறி கருவியாற் றினிர்பூசித்
திமிர்பயங் கரவுருக் கொடுமுன்சா ரிடர்முழு துடனற விளிதாங்கே
கமலயந் திரமுதல் வனைநாளு நீடளி நீடவி யோடிறைஞ்சி [ளா
விமலமெய்த் தவமுதல் வளர்ந்தோங்க விழைந்தமர்ந் தனனென்னு முனைவகே

அயன்மக னந்திசே வடிதாழ்ந்தெம் மண்ணலின் வருணன்மார்க் கண்டேசற்
கியலுறு தென்றிசை யிலிங்கமீந்தி யினையென புலைத்தலோ யம்முனிவ
னுயுமவழி யருடரு சிவலிங்க முற்றிவ ணிறுவிய புதனாயமை
மயரற வருளுதி யோவென்ன மறுவலு மறுவறு நந்தீசன். (அக)

கடிமல ரடியிணை முடிகொண்டு களியளி யொடுதொழு தருள்கென்ற
படியருள் கதைபக ருதுமென்று பழமைசால் முனிமுனி குலமுன்பு
நொடிதரு மவணரு ளியலிந்த நுவல்கதை வினவினர் புகலன்பா
லடிவொழி பிகல முழுதுண்டு மருவுவ ரிணையறு பரவின்பே. (அஉ)

வருணன் சாபமோசனச் சருக்கமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — ருஅக.

---

# மார்க்கண்டேயச்சருக்கம்.

சிந்துர பூப சாபமொரு சிந்த காதை யோதினந்
கந்த னொரு மாமிரு கண்டு கூறு மாவனே
மந்த்ர பேச பூவை வந்த பேறு கேளென
நந்தி னாத சீரு ணர்ந்த நாத னேதுமால். (க)

பரவருமிக் கைலாய பரம்பரைபூ வுலகினிடை
மருவிவளர் தரப்பெறுக மன்னுயிர்க ளின்னறரு
மிருண்மலநீத் தருணெறிசென் றின்புறுகென் றெம்பெருமான்
றிருவுளம்வைத் தயர்ந்தனனிச் செயலிவ்வா றிவணிகழ. (கo)

பண்ணிலவு தமிழ்வேதம் பரவுபெருஞ் சிறப்பினையர்
மண்ணுலகிற் றூங்கானை மாடமெனுந் திருக்கோயில்
கண்ணிலவு திருப்பெண்ணை கடமெனுஞ்சீர்த் திருப்பதியி
னுண்ணிலவு மொருவர்பர மேயாத்தமபுண் ணியசீலர். (கக)

இவர்பெயரச் சுதனெனமுன் னிலகுகளப் பாளரிவர்
தவமகிமை யாருமுறை தரலரிதில் லறத்திவர்வாழ்ந
தவமறநன் மகப்பேற்றி னூர்வமுற்றீஇத் தமக்கென்று
மெவயகனு நீக்காதி யாவையுஞ்செய குலகுரவன். (கஉ)

திருத்துறையூர் நகர்க்கதிபன் சிவத்துவிசர் குலத்தலைவ
னருத்திவளர் சிவாகமமே யருமறைமுன் னூலனைத்துந
சருத்தொருமித் தோர்ந்துணர்ந்து காட்சிநிறை காரணத்தாற்
றிருத்துசகலாகமபண் டிதநாமச் சிறப்புடையோன். (கங)

ஆயவருணந் திசிவா சாரியனை யடுத்திறைஞ்சி
நேயமலி சங்கருத்தைச் சகுந்தியவன் சொன்னெறியே
தூயசிவ சருடமெய்னாந் தொகப்புரிந்து பகர்பேறு
மேயதவ தனக்தாகாத் திறக்காண்மீட் டிந்த குரவன். (கச)

அடிபரவிப் புகன்றனைமேசா ட ருமையயிற் கோதிரித்து
வடிதமிழ்பா மறைமுறையை மற்றனைய சிவதலன்
கடியலர்நூ யருச்சித்தக் களப்பாளர் குலப்போதந்
நெடியதிருக் கயிறிதனி னிவசித்து ராத்துகென. (கரு)

அச்சுதரக் களப்பாள ரம்முறையி னம்முறையி
ரச்சுகரத் தெடுத்திமய நங்கையொரு பாகனையுள்
வைச்சுரிய மூவரையும் வழுத்திமெலி யேற்கினிய
மெய்ச்சுதனல் குகவென்று வேண்டிவகிர்ந் திட்டனரால். (கசு)

அனையதிரு வடங்கன்முறை யதனிலெவ ரிடுங்கயிறு
தனையடையா ளங்கொரிந்து தணத்தியவண் முன்பிறைவோர்
பனையிதழ்க ளொடுத்துடன்முற் படிமேனால யிற்றெழுந்து
பினையிதழின் முடிவுமுமப் பெருந்திருப்பாட் டெடுத்திசைப்பார். (கஎ)

முழுதுமென் னுளத்தைவாட்டுமாலினியான் மொழிவதொன் றுண்டுகொலெ
ன்னைக், கழலிணைதொழலுமுலகினுக்கன்புகாட்டியநடித்தவெண்காட்டெ, மழ
லவிர்காத்தோனன்பநீவேட்டவரும்பொருள்வரும்பதமிதுவே, மழவின்மா
ன்மியநாம்வகுக்கொணாதுனக்குவாய்த்ததென்றருளுபுமறைந்தான். (௨௬)

விழித்தெழுந் தனரச் சுதர்களப் பாளர் மிக்கெழு முவகையின் மிதந்தாங்
கொழித்திட லருமங் கியமநன் னெறிநின் றொழுகுநா ளுலகெலா முய்ய
வழுத்துசுத் தாத்து வைதசித் தாந்த வாய்மைமாண் சைவமீ வாழ
விழுத்தகு தூய பரம்பரை யருளான் மேதினிமீதினி விளங்க. (௨௭)

திருவருள் பெருக வனையதம் பதிகள் செய்தவத் தெய்விகச் சிசுவா
யருளொளிப் பிழம்பா யவதரித் திடக்கண் டன்னையுந் தாதையு மளவாப்
பெருகுமா னந்த வாரிதோய்ந் தருமைப் பெருந்தவக் குருந்தினைப் பேணி
யரனரு ணினைந்து நினைந்துள முருகி யார்வநீட் டினமெடுத் தணைத்தார். ()

இன்னவென் பருஞ்ச ருமைபா ராட்டு மிருஞ்செய லின்புறப்புரிவார்
தென்னில முயர்சார் திருவவ தாரச் சிறப்புயர் திருவிழா முதல
பன்னரும் பெருமைத் தினவிழா வனைய பதியினர் கிளைஞர்க ளேனோர்
தன்னிக ருவகை பெருகிய புரிந்து சாதகன் மாதிகள் சமைத்தார். (௨௯)

பல்லுக மொருவா தருந்தவம் புரிந்து பயிற்றினுங் கிடைப்பரும் பொருளைநந்
நெல்லியங் கனியிற் கிடைத்ததென் றேழைநீர் முழு கிருமுது குரவ
ரல்லினு நீங்கா வருந்துணை யெனக்கொண் டவிர்மணிப் பணியினை யனைத்து
நல்லுறுப் பணிந்தா ருயிரினும் போற்று நலனெவர் நவிற்றுவா ரம்ம. (௩௦)

வைதிக சைவ தாபன குருவாய் வந்தருள் புரிந்தெதிர் மறையுஞ்
செய்துற நிறுவி யமர்ந்தன முன்னோ டெய்விக சுத்தவத் தாவித
சைவசித் தாந்தத் தனிக்குரு மணியாய்ச் சார்ந்தரு ளேபுரி குதுமென்
றுய்வருள் காழி வாழ்வுமின் னருமீண் டுதித்ததென் றுவப்புறு முரசம். ()

வழுத்துமித் தூய சேயினைச் சுவேத வனப்பெரு மானெனு நாமந்
தழைத்திட வழைத்தப் பதியினிற் சென்றோட் டங்கியச் சுவேதவ னேசற்
கிழைத்திடு விசேட பூசனை யாதி யியற்றியா ரருள்விடை பெறுபு
மழத்திரு மகவு மனையொடு தம்மூர் வந்தமர்ந் தனர்களப் பாளர். (௩௨)

ஆங்கமர் வுழிநன் மாதுலர் தமக்கின் னருண்மக வின்மையி னனைய
தேநகுத லையஞ்சொன் மகவையே தமக்குஞ்சேயெனப்பெறுநசையிர்ப்பத்
தாங்குசோ தரிமைத் துனரிடை வேண்டித் தம்பதிவெண்ணெய்நல்லூரிற்
பாங்குறப் பெற்றூ ரொடுந்தனிச் சேயைப் பரிந்தெடுத் தழைத்துடன் படர்
[ந்தார். (௩௩)

என்றுளந் துணிந்தாங் கன்புமா றருளு மின்புமற் புதமுநின் றியக்கச்
சென்றொளிர் விமானத் தோடுமம் மறுகிற் சிறார்வெருண் டோடவு மசையா
தொன்றொளி விரியத் தனியமர் சேய்பா லுற்றுநேர் நோக்கியவ் வொருசேய்
தன்றனிக் குருவாஞ் சத்திய ஞான தரிசனி யுருவெனத் தயங்கும். (சக)

பெருகுமற் புதநேர் கண்டினி தெடுத்தப் பிள்ளையி னுள்ளிய மேனி
மருவிய துகடன் றனையாற் றுடைத்து மடியில்வைத் தணைத்துடன் மகிழ்ந்தே
யருளின்மூழ் குவித்தாங் கறன்முழு குவித்தின் பளிக்கும்வெண் ணீறுமெய்
யணிந்து,திருவருட்சத்தியோ நிருவாணதீக்கையாநோக்கமுற்றளித்தே.(சஉ)

தீக்கைசெய் யுழியா சிரியனச் சீடற் சிவமக வாக்கிருஞ் செயலுக்
கேற்கநன் ஞம காணஞ்செய் முறையா லெப்பெய ரிடுதுமென் றெண்ணி
நோக்குதன் குரவன் சாயையே போலு நோன்மையாற் றந்தைபேர் மைந்தற்
காக்குதன்மரபான்மெய்கண்டானெனவேயனையதன்குரவன்பேரமைத்தான்.

புனிதவத் துவித நிகழ்சிவ ஞான போதநூற் பொருண்முழு தமைய
வினிதுப தேசித் திதனைநீ மைந்த விருந்தமிழ் மொழிபெயர்த் திதற்கோர்
தனியுரை வார்த்தி கம்மெனும் பெயராற் சாற்றுகென் றருளிமே லனைய
நனியொளிர் சேயை யுடன்கொடு மேலு நசையெழ வாங்கணித் தேகி. (சச)

பிறைநிக ரொருகோட் டைந்துகைப் பொல்லாப் பிள்ளையார் திருவடிக் கமல
நறைமல ரனைய பிள்ளையோ டிறைஞ்சி நயத்துதி பல்புகன் றெதிர்நின்
றிறைவனே யடியா ரெண்ணியாங் கருளு மெந்தையே யிந்துசே கரனே
மறைசிவா கமார்த்த சொரூபனே யிந்த மைந்தனின் னடைக்கலமைய.(சரு)

காமிக முதனு லேழ்சிவா கமமிக் காண்முளை கருத்தமைந் திலங்க
நீமிக வருள்கென் றத்தனிச் சேயை நேருற விருத்திமீண் டனைய
தோமிகன் முனிவ னீங்கின னுங்கத் தோன்றலை யேன்றிப முகத்தோ
னேமிக வாத சிவாகம முழுது மினிதரும் பொருள்விரித் திசைக்கும்.(சசு)

இன்னண மாங்க ணிபமுகத் தொருவ னிருங்குரு சிகாமணி யாகித்
தன்னமர் தனியி னன்னமெய் கண்ட தனையனமுன் விறுவிடையாதி
நன்னருற் றிடப்போ திச்திடுங் காலந் நாயகன் றளிப்புற நனி
தன்னினீர்கொளுமோர்தையலக்கோயிறனிலெழுமொலிசெவிச்சார. (சஎ)

அத்தனி நேர்நின் றுற்றுநோக் கினளாங் கனையசேய் தன்னையே கண்டா
ளித்தனிச் சேயை மூங்கையென் றந்தோ வினைவதென் றந்தைதாய் முத
வித்தகமொழிபற் பலபுகன் றீண்டு விளங்குமீ துணர்ந்திலர் போலு [லோர்
மித்தகையவர்க்காங்குணாத்துநாமென்றுங்கேகினள் *செய்மையிற்கண்டாள்.

* செய்மையிற்கண்டாள்-வினையாலணையும் பேர்.

ஏகியாங் கவர்மு னென்னைகொ ணீர்ந மிளந்தனிச் சேய்மணி மூங்கை
யாகிய தெனத்துன் புறலொரு கோடி யருண்மொழி தருவதின் றறிந்தேன்
மீகெழு பொல்லாப் பிள்ளையார் கோயின் மேவினீர் காண்மினென் றனளவ்
வோகைவா சகந்தஞ் செவிப்புகு முன்ன ரோடிபு தாதையக் கோயில். (சக)

முன்னுறச் சேய்த்தாய் வரும்பொழு தாங்கு மொழியெழு மொலியெதிர் கேட்டார்
பின்னராங் கொருவ ரிலாமையுங் கண்டார் பெருந்தகைச் சிகாமணியும்
பன்னுசீர்ப்பொல்லா மணியுமே யுடனுய்ப பிரிந்தவீற் றிருத்தலுங் கண்டா
ரென்னெனவணித்தாயேகினர்முன்ன ரெழுமொழியிலாமைபின்கண்டார்.

ஆங்கவர் வரவு மாகம முடிவு மமையமொத் தமைந்ததோ வயலார்
பாங்குறி ஞேதப் படாதெனு மரபைப் பாதுகாத் திடுமுளத் தாஞே
தீங்கற முழுதுந் தெருள்கென ளங்கொள் செய்தியான் முற்றிய திறஞே
வீங்குநாளடைவிற்றனித்துணர்த்துதுமென்றெண்ணியோயாதெனவுண
[ரேம். (ருக)

வேறு.

பொல்லா மணியுஞ் சேய்மணியும் புகலு மொழியொன் றின்றியமர்
வில்லார் தோற்றங் கண்டுவகை மேன்மேற் பெருக வீழ்ந்திறைஞ்சி
நல்லார் பரவு மிபமுகத்தெந் நாதா வேதா கமப்பொருளை
யெல்லாமுணர்த்துமெந்தாயெம்மிளஞ்சேய்மவுனமிரித்தனையோ. (ருஉ)

மாமன் மலப்பாம் புருவொழித்த வரத சரத வள்ளாலோ
சேம நிதியே நின்றிருமுன் றிருவாய் முதலிற் றிறப்பதெனுந்
தேமன் விரத நெறிநின்றுன் றிருமுன் றிருவாய் மலர்சேயை
யூம ஞேவென் றுளங்கொண்டோ முண்மை யுணரு முணில்லோம். (ருங)

என்று துதித்தா ரருட்சேயை யெடுத்தா மணைத்தா ரின்புற்றூர்
நன்று பியன்மேற் கொண்டுவந்தார் நணுகுங் கிளைஞர் நற்பதியோர்
துன்று மோகைப் பேரோதை துவைதயச் சூழத் தம்மனையிற்
சென்று மணியா தனத்தனைய சேய்வீற் றிருப்ப நேர்பணிந்தார். (ருச)

ஈன்ற பொழுதிற் பெரிதுவந்தா ளிளஞ்சேய் சான்ருே னெனுமகிமை
தோன்ற நேர்கண் டின்புற்று நேக்கி யெடுத்தா ளேக்கமைத்தா
ளூன்று மன்பான் மார்பணைத்தா ளுச்சி மோந்தாண் முத்தமிட்டா
ளான்ற தாய்செ யருஞ்செயல்க ளறைத லெளிதோ வம்மம்ம. (ருரு)

நாளு நாளு மப்பதியோர் நவிற்றற் கருமிவ் வற்புதங்கேட்
டாளுங்குலதெய் வத நிதுவென் றடிக்கு மேனைப் பல்பதியோர்
கேளிர் முதலோர் வந்துவந்து கிடைத்துக் காண்டன் மாத்திரையே
மூளு மிடர்நீத் திட்டமெலா முன்னி யாங்குப் பெற்றுவப்பார். (ருசு)

மதிவே ணியனே பொருளென்னும் வாய்மை யுணர்ந்து மனந்துணிந்த
வதிதீ விரசத் தினிபாதத் தமைதி வாய்த்த வுத்தமர்கண்
மூதிர்மா மனவா சகங்கடந்தார் முதலோ ரடுத்துச் சூழ்ந்திறைஞ்சத்
திதியா ருருணேக் களித்துரிய தீக்கை திகழப் குவநோக்கி. (௫எ)

அருள்செய் குரவன் மொழிப்படியே யருமைத் தமிழின் மொழிபெயர்த்த
பொருள்செய் புனித சிவஞான போதந் தனைவார்த் திகமுடனே
தெருள்செய் தருளி யவ்வடியார் செறிந்து சூழ நாப்பணமர்ந்
திருள்செய் மலநீத் தத்துவித வின்பே தருமச் சேய்மணிதான். (௫அ)

இவ்வா றனைய மெய்கண்ட வின்ப மணிநா டொறும்பொல்லாக்
கைவா ரணமா முகத்தெந்தை கழல்போற் றமைது முதனியம
முய்வா ரடுப்பப் புரிந்தமர்ந்தாங் குறவீற் றிருக்குஞ் செயல்கேட்டார்
சைவா திபர்தங் குலகுரவர் சகலா கமபண் டிதாபாங்கர். (௫௯)

ஆக மாதி யருணூல்க ளமைய வோது மன்பர்சிலர்
சோக மாறி யமைந்துமனந் தூய்மை யுறுமா சிவஞான
தாக மாகி யதுபுணர்த்துந் தன்மை யவர்பா லின்மைதெரீஇ
யூக மாக வெண்ணெய்நல்லூ ருற்றூர் காணப் பெற்றூரால். (௬0)

முன்ன ரமர்சத் திநிபாத முதியர் பெறும்பே றுற்றூங்கு
நன்ன ருளாம் மெய்கண்ட நாதன் கழுறூழ்ந் துடன்சூழ்ந்தார்
பின்ன ரனைய திருத்துறையூர்ப் பெரிய ரவர்சார் புணர்ந்துடனே
யினனர் தமையீண் டழைத்துறுகென் றேயி னூர்மா ணவர்சிலரை. (௬க)

அவரு மனைய ராயினர்பின் னருஞ்சிற் சிலரை யனுப்பினரச்
சிவமா மறையோ ரனறவருஞ் சென்றூங் கவ்வா றுடனமர்ந்தா
ரிவர்மா ணுக்க ரெல்லாரு மிவ்வா றடுத்து வெண்ணெய்நல்லூர்த்
தவர்போற் றியன்மெய் கண்டமணி சரணே சரணச் சார்ந்தமைந்தார். (௬௨)

தம்மா ணுக்க ரெல்லாருந் தமைவிட் டேகத் தனித்தமரு
மம்மா தவரீ தென்கொலோ மை யடுத்து நமந்த களப்பாள
ரம்மா ரருளாற் பெறுசிறுவ னவிற்றுங் குதலை யினுங்கிரம்பா
னம்மாண் பினனென் றடுத்தமர்ந்தா ரெம்பான் முழுதோர் மாணவகர். ()

நன்று நன்று கலிப்பெருமை நவிற்றற் கரிய தேயென்பா
ரொன்று முணர்ச்சி நுண்ணியர்சென் றுற்ற தாகித் திடற்பாற்றே
சென்று காண்டு மென்பார்நஞ் சீடன் சிறுவ னெதிர்புகுந்து
நின்று காண்ட னம்பெருமை நிலைமைக் கடுக்கு மோவென்பார். (௬௪)

இவ்வா றனைய சிவமறையோ ரெல்லை கடந்து முறுகிவளர்ந்
தவ்வா ணவவல் லெபஞ்சாயு மமய மணித்தா தலுக்கிசைய்
வொவ்வா வுரைகள் பலபுகன்றுங் குறலே துணிந்தா ரொருதலையா
யெவ்வா யுறினுந் தாமுனஞ்செ லெழுச்சி யணிக ளூறச்சென்றார். (சுரு)

சிவிகை சிதைந்த புத்தகங்கள் செறியுஞ் சுவடி மசசொடிந்த
கவிகை முதல முரிந்தபெருங் காற்றாற் சுகுளம் பறந்தடுத்த
குவிகை யினரும் விட்டகன்றார் கூறு மிவற்று மாணவரோ
யவிகை தெளியப் பாதுகையோ டடுத்தா ரதுவுங் குமிழ்தெறித்த. (சுசு)

கருவி கழன்று சிவத்தோடு கலவுஞ் சுதசாத் துவிதத்தை
மருவும் பெருமை தமக்கணித்தின் வாயத்த வுணர்த்தாங் குடன்சூழும்
பொருள்க ளொழியத் தனித்தேகும் புனிதர் வெண்ணெயப் பதிமேவித்
திருநல் லருளே யுருவாய சனிமா குரவ சிகாமணிவாழ். (சுஎ)

திருமா ளிகைசே ரணித்தாகச் சென்று ரனைய மெய்கண்டா
னருளா னனசேர் புவிநோக்க வமர்ந்து நாப்பண் வீற்றிருப்ப
வொருவாப் பெரியர் திருமுறையோ தொண்கை யினாபீற் பலர்சூழ்ந்து
பொருளா ரமுதுண் டகன்வசமாயப் போற்றுங் கொலுசே ருறக்கண்டார்.

யாமுட் புகுனேர் கண்டிறைஞ்சா னிருக்கை யெழாமுற் றிருக்கைதரான்
றோமற் றிடுநம் வரயமையினுற் றோன்று மிவனோர் சற்றலடா
தாமற் புதங்காண் பதும்வேண்டு மதற்கீண் டிதுவே யுபாயமெனத்
தாமப் புறத்தோரா செயல்பிறிதாற் சார்ப்பார் போலக் குலவினரால். (சுகூ)

அப்போ தனைய மெய்கண்டா னமைந்து சூழு மப்பெரியார்
கொப்போ தருமா ணவச்சிம்புப்பி னுண்மை யுணர்ந்து திறங்கேட்டா
ரிப்போர் மலத்தி னியலெனனை யென்றுங் குப்பி லனவினச
சொற்போ யுறலு மெய்கண்ட நாய மணியாங் கோசிறிது. (எ0)

பொழுது தாழ்த்து மிர்ந்திதுவே போலு மெனமோ பார்த்திடலுந்
தொழுது வீழ்ந்தா ரசன்னிமலாத துணைத்தா ளூரிஞ்சக கிடந்தாங்கே
யழுது பொருநி யெந்தாயோ வறியாச் சிறியே னுற்றபிழை
முழுதும் பொறுத்தா ளெனபல மொழியாற் றுதித்து நேர்பணிந்தார்.()

நேயம் வறந்து திரிசுருங்கு நிலைமைச சுடர்மிக் கெழுந்தொளிர்ந்தே
மாயு முடலுங் கதுபோல வளரா ணவமே லெழுவினவி
யோய நிரீக்க ணந்கண்டாங் குடனு ரடிவீழ்ந் தெழாமலமா
தூய சிட்ட சிகாமணியைத் தூக்கி யெடுத்தொண் டீககைமுறை. (எஉ)

திகழ மலர்ப்பூந் திருவடிகள் சென்னி சூட்டிச் சிவம்புணர்த்திப்
புகல வருஞ்சீர்ச் சிவஞான போதந் தெருட்டி முன்புகுந்தாங்
ககல வருமா றெண்மருக்கு முதன்மை யளித்தவ் வேழெழுவர்
நிகர்மா ணவகர் சூழ்ந்திறைஞ்ச நிலவு மனைய விளங்குழவி. (எங)

திருவார் துறையூ ரருணந்தி சிவனக் குரவ சிகாமணிபாற்
பொருவா வினவுஞ் சிவஞான போதத் தாழ்நுண் பொருளெல்லாந்
தெருள்வாய்ந் திலங்கச் சிவஞான சித்தி யாரென் றுத்தமர்போற்
றொருமாண் வழிநூல் வழியடியா ருடன்கொண் டெய்வான்விரித்துரைத்தார்.

இந்நூ லுடனூர் நன்னூலோன் றிருபா விருபஃ தெனும்புனித
மெய்ந்நூ றனதா குருமணிபான் மேவுந்துதியாச் சிவஞான
முன்னூற் போதத்திருவிழியா முறைசெய் தமைத்தக் குருமணிதா
னன்னூல் சமர்ப்பித் தாங்கொருவா தமர்ந்தார் துறையூ ரருமறையோர். ()

சாற்று மிவர்பான் மறைஞான சம்பந் தருமாங் கவர்பாங்கர்ப்
போற்றும் பெரியா ருமாபதியும் புணர்ந்து தீக்கை யுபதேசப்
பேற்றின் வாழ்ந்தா ரிந்நால்வர் பெயர்சந் தான குரவரென்ப
தேற்று மனைய வுமாபதிபாற் றிகழ்சந் ததிகள் பற்பலவாம். (எரு)

குலவு மினைய சந்தான குரவர் நால்வர் பெரும்புலியி
னுலக மெவையும் வந்திறைஞ்சி யுய்ந்து வாழ்கென் றிருவருளா
னிலவு கோயில் கொண்டமர்ந்துன் னியவீற் றிருக்கின் றுரென்று
மலரு மனைய மெய்கண்ட மணிவந் துதிப்ப மாதவஞ்செய். (எஎ)

பெருமை யுடைமை யான்முனநாம் பேணி யுரைத்தா மேலினியத்
திருவெண் காட்டிற் கண்மையினிற் றிகழ்ச் புரமென் றொன்றதுசீர்
வருதண் கடவூ ரெனும்பெயரால் வயங்கு மனைய திருப்பதியின்
மிருகண் டருள்செய் மார்க்கண்ட விமல முனிவந் தடுத்தாங்கே. (எஅ)

தன்றே காவ சானநிலை தணத்தி நீடா யுகந்தருவான்
மன்ற டமலற் பூசித்து மன்ற தெனு டொறும் புரிந்து
நின்ற னவனுக் கிறையளித்த நெறியா யுகமுற் றியதுணர்ந்து
குன்ற விறலின் மறலியவட் குறுகி முறுகி வளரளியான் (எகூ)

ஓவா துஞற்று சிவார்ச்சனையி னொருமித் தமர்மார்க் கண்டனெதிர்
லாவா வென்னும் விளிமாற்றம் வழங்க வனையான் விளிமாற்ற
மேவாய்ப் புறச்செ யர்ச்சனைநின் றெதிர்நோக் கிலன்மேற் பிதிர்நோக்கத்
தாவாக் கினிசென் றுடல்வெதுப்பத் தன்கைப் பாசம் பிணித்தீர்த்தான். ()

வேறு.

ஈர்த்த பாசமுன் னிடைவெளி நீத்திமா சலேகோன்
றீர்த்த மேனியிற் சிவாக்கியம் போன்மெனச் சேர்த்த
நார்த்த சிந்தையர்க் கெவரெனும் புரியிடர் நணுகா
கூர்த்த வின்பமே யாமெனக் கூறுநா றுணிந்தாம். (அக)

குழக னெண்கட வூரிறை பேரருட் குறியைத்
தழுவி யேத்தினன் றீனயனுங் கீனயனைத் தளரேல்
பழுது தொண்டருக் காற்றினர் கெடுவரென் பான்மை
வழுவில் கூற்றையிக் கூற்றினிற் காட்டுது மைந்த. (அஉ)

என்று வாய்மலர்ந் திறலினம் மறலிவீழ்ந் திீனவா
னன்று தைத்தன னும்பர்கோ னம்பிரான் றன்மே
லொன்று வெஞ்சின மடங்கலான் மடங்கறன் னுடலங்
கன்று வித்தவக் கருமையோர்ந் தருமைமார்க் கண்டன். (அங)

ஐய விப்பழு தெப்பொழு தகலுமென் றடிதாழ்ந்
துய்ய மெய்ப்பழு தொருங்கொழித் தடுத்தவர்க் குதவி
செய்ய முந்துறு சிந்துறழ் கருணையோய் திறம்பா
மெய்ய செய்யபொன் மேனிய வானியல் விமல. (அச)

எனத்து தித்தலு மன்பகே ளிப்புவி யிடையே
மனத்து தித்தபல் வரமெலா மளிக்குமா வனமொன்
றினத்து தித்தபன் முனிவர்கு ழிடனதா மீனய
வனத்து தித்தவண் பச்சிம வாவியொன் றுளதால். (அரு)

வீன நீருடற் புறத்தழுக் கிரித்திடு மெல்லை
தானும் வேண்டுமோ முழுதறி னக்கணந் தனிலுன்
மேனி நின்மைபோ மேலெழின் மேலொளி மேவு
மான வாய்மையா லத்தட நீரினி யாடி. (அசு)

ஆங்க ருட்சுயம் பமுதலிங் கேசனை யன்பு
தேங்க நேர்தொழு தமர்குதி திறலிலெவம் மறலுன்
பாங்க ரெப்பொழு தினுமினி யுறுதசிர் படைத்தே
யோங்கி வாழ்சிரஞ் சீவியா யுறுதியீ துறுதி. (அஎ)

அனைய தீர்த்தநின் னுமமே யகிலமும் போற்றப்
புனையு மென்றுருக் கரந்தவா சகமிசைப் பொலிய
வினித வாய்மைதன் செவிபுகுந் துளங்குளிர்ந் தீர்ப்ப
வினைத புமமுனி பணிந்தருள்விடைபெறீஇ மீண்டான். (அஅ)

சூத கானனத் தெய்தினன் றண்ணளா மேல்பார்
சீத வாவிதோய்ந் தெழுமுன மலினமெய் தீர்ந்து
பூத மேனிமிக் கொளியெழப் போந்தமு தேச
பாத வம்புய முடியுறப் பன்முறை பணிந்தான். (அகூ)

எழுந்து நின்றமு தருவநோக் கிருகணீ ரருவி
பொழிந்து பாய்தரப் புரையிலான் புரைந்துள முருகி
வழிந்து சென்றருட் டுணையடிக் கமலமென் மலரி
லழுந்து மன்பினுற் றிருமுனின் றருந்துதி புகலும். (கூ0)

சோம ருத்திர வகிலமா நதிபதே சுருதி
நாம வுக்கிர வக்கிரோ சுராபர நாத
பீம சாருவ வணபதே பிரணவ ரூப
பூம ஞம்பிர வனேசநின் பொன்னடி போற்றி. (கூக)

பாசு பாணிய பசுபதே யிரணிய பாகு
வாசு பத்தகா மியபரி பூரண வரத
தாசு கற்பக விரத்தமா லோகபாந் தவபொற்
புாசு காம்பிர வனேசநின் பொன்னடி போற்றி. (கூஉ)

வனச நேத்திர குசுமமா பூசித மாற்குத்
தனக ராம்புய சங்கர தாயக சடில
கனக சம்பியா கந்தர கந்தர கரள
புனித வாம்பிர வனேசநின் பொன்னடி போற்றி. (கூங)

அடிய ரெண்ணிய வெண்ணியாங் கருளமு தேச
வடிகொள் சூலசார் மிருகண்டு வம்மிச பால
முடிகொள் வானதி மதிபொதி முக்கண திருவெண்
பொடிகொ ளாம்பிர வனேசநின் பொன்னடி போற்றி. (கூச)

உலக முற்றுமின் பளித்திஙனி தோம்பரு ளுரிமை
நலன்மு ஞம்பல வரும்பொரு ணிறைசிவ நாமந்
தலைகொ ளாற்றல்வே றெவர்க்குமின் றொருதனக் கேயாய்ப்
பொலியு மாம்பிர வனேசநின் பொன்னடி போற்றி. (கூரு)

என்றிவ் வாதிபஃ றுதிபுகன் றடிக்கடி யிறைஞ்சு
நன்றி கூர்மிரு கண்டுசே யானன நளினத்
தொன்றி முக்கணும் பானுவாய் மலர்த்திட வுவகை
துன்றி மந்திரேச் சுரனெதிர் தோன்றியீ தருளும். (கூசு)

வேறு.

ஈர்த்த பாசமுன் னிடைவெளி நீத்திமா சலைகோன்
நீர்த்த மேனியிற் சிவாக்கியம் போன்மெனச் சேர்த்த
நார்த்த சிந்தையர்க் கெவரெனும் புரியிடர் நணுகா
கூர்த்த வின்பமே யாமெனக் கூறுநா றுணிந்தாம். (அக)

குழக னெண்கட லூரிறை பேரருட் குறிலையைத்
தழுவி யேத்தினன் றனையனுங் கனையனைத் தளரேல்
பழுது தொண்டருக் காற்றினர் கெடுவரொன் பான்மை
வழுவில் கூற்றையிக் கூற்றினிற் காட்டுது மைந்த. (அஉ)

என்று வாய்மலர்ந் திறலினம் மறலிவீழ்ந் தினைவா
னென்று ரைத்தன னும்பர்கோ னம்பிரான் றன்மே
லொன்று வெஞ்சின மடங்கலான் மடங்கறன் னுடலங்
கன்று வித்தவக் கருமையோர்ந் தருமைமார்க் கண்டன். (அங)

ஐய விப்பழு தெப்பொழு தகலுமென் றடிதாழ்ந்
துய்ய மெய்ப்பழு தொருங்கொழித் தடுத்தவர்க் குதவி
செய்ய முந்துறு சிந்துறழ் கருணையோய் திறம்பா
மெய்ய செய்யபொன் மேனிய வானியல் விமல. (அச)

எனத்து தித்தலு யன்பகே ளிப்புவி யிடையே
மனத்து தித்தபல் வரமெலா மளிக்குமா வனமொன்
றினத்து தித்தபன் முனிவர்சூ ழிடனதா மனைய
வனத்து தித்தவண் பச்சிம வாவியொன் றுளதால். (அரு)

வனை நீருடற் புறத்தழுக் கிரித்திடு மெல்லை
தானும் வேண்டுமோ முழுதறி னக்கணந் தனிலுன்
மேனி நீன்மைபோ மேலெழின் மேலொளி மேவு
மான வாய்மையா லத்தட நீரினீ யாடி.' (அசு)

ஆங்க ருட்சுயம் பமுதலிங் கேசனை யன்பு
தேங்க நேர்தொழு தமர்குதி திறலிவெம் மறலுன்
பாங்க ரெப்பொழு தினுமினி யுறுதசீர் படைத்தே
யோங்கி வாழ்சிரஞ் சீவியா யுறுதியீ துறுதி. (அஎ)

அனைய தீர்த்தநின் னைமமே யகிலமும் போற்றப்
புனையு மென்றுருக் கரந்தவா சகமிசைப் பொலிய
வினித வாய்மைதன் செவிபுகுந் துளங்குளிர்ந் தீர்ப்ப
வினைத பும்முனி பணிந்தருள் விடைபெறீஇ மீண்டான். (அஅ)

சூத கானனத் தெய்தினன் றண்ணொளா மேல்பாற்
சீத வாவிதோய்ந் தெழுமுன மலினமெய் தீர்ந்து
பூத மேனிமிக் கொளியெழப் போந்தமு தேச
பாத வம்புய முடியுறப் பன்முறை பணிந்தான். (அகூ)

எழுந்து நின்றமு தருவநோக் கிருகணீ ரருவி
பொழிந்து பாய்தரப் புளையிலான் புனைந்துள முருகி
வழிந்து சென்றருட் டுணையடிக் கமலமென் மலரி
லழுந்து மன்பினுற் றிருமுனின் றருந்துதி புகலும். (சூ0)

சோம ருத்திர வகிலமா நதிபதே சுருதி
நாம வுக்கிர வக்கிரோ சுரபர நாத
பீம சாருவ வனபதே பிரணவ ரூப
பூம னும்பிர வனேசநின் பொன்னடி போற்றி. (சூக)

பரசு பாணிய பசுபதே யிரணிய பாகு
வரசு பத்தகா மியபரி பூரண வரத
தரசு கற்பக விரத்தமா லோகபாந் தவபொற்
புரசு காம்பிர வனேசநின் பொன்னடி போற்றி. (சூஉ)

வனச நேத்திர குசுமமா பூசித மாற்குத்
தனகராம்புய சங்கர தாயக சடில
கனக சம்மியா கந்தர கந்தர கரள
புனித வாம்பிர வனேசநின் பொன்னடி போற்றி. (சூங)

அடிய ரெண்ணிய வெண்ணியாங் கருளமு தேச
வடிகொள் சூலசார் மிருகண்டு வம்மிச பால
முடிகொள் வானதி மதிபொதி முக்கண திருவெண்
பொடிகொ ளாம்பிர வனேசநின் பொன்னடி போற்றி. (சூச)

உலக முற்றுமின் பளித்தினி தோம்பரு ளுரிமை
நலன்மு னும்பல வரும்பொரு ணிறைசிவ நாமந்
தலைகொ ளாற்றல்வே றெவர்க்குமின் றொருதனக் கேயாய்ப்
பொலியு மாம்பிர வனேசநின் பொன்னடி போற்றி. (சூரு)

என்றிவ் வாதிபஃ றுதிபுகன் றடிக்கடி யிறைஞ்சு
நன்றி கூர்மிரு கண்டுசே யானன நளினத்
தொன்றி முக்கணும் பானுவாய் மலர்த்திட வுவகை
துன்றி மந்திரேச் சுரனெதிர் தோன்றியீ தருளும். (சூசு)

கேட்டி யாலெமக் கினியமெய் யன்பநீ கிளத்தும்
பாட்டி ருந்துதி யாலெமக் கின்பமே பலித்த
வேட்ட தென்கொலோ பகருதி யென்றனன் விமலன்
றேட்ட மிக்கவன் பின்னரும் பணிந்திது செப்பும். (௯௭)

பெரிய நாயகி மணாளநின் பிறங்கிரண் டெழுத்தா
மரிய வஞ்சிவ நாமமா மனுத்துய ரனைத்து
மிரிய நீக்கிமெய்ச் சிவத்துவப் பேறரு ளியற்கை
தெரிய வாய்ங்க மாகமத் துணிபுரார் சிறியர். (௯௮)

எந்தை நின்பத மன்றியீண் டெப்பொரு ளெனினுஞ்
சிந்தை வேட்டிலேந் திண்ணமே யேழையேஞ் சிறியேம்
புந்தி யான்மறை யபுத்தியாற் பேதமெம் புத்தி
வந்தி யாதப சாரமேற் புரியினும் வள்ளால். (௯௯)

திருந்து முற்றுணர் வற்றிலாச் சிற்றறி வுடையார்
புரிந்த செய்வினை நோக்கலென் றுமெனப் பொறுமை
பரிந்து செய்தெமை மருதருள் புரிகெனப் பாரவி
யருந்த வத்திரு முனிபுகன் றிறைஞானு மமலன். (௧௦௦)

வேறு.

வருதியா லரிய தோன்றல் வந்திவண் முந்து நீதோய்
சரசுநின் பெயரி னாலெச் சகமும்போற் றியநின் றோங்க
மருவிமூழ் குறப்பெற்றோர்க்கு வல்வினை யனைத்து நீங்கி
யரியன புத்தி முத்தி யங்கையா மலக மாக. (௧௦௧)

என்றினி தருளி மேலு மின்னுநீ வேண்டிற் றென்னை
நன்றுரை யெனவெம் பெம்மா னமந்துமார்க் கண்டன் கூறுந்
துன்றியா ருயிர்க ளெல்லாந் தோய்ந்துய்வா னீண்டுடன் றுன்னீ
நின்றருள் வாமென் றென்று நிலையுதல் வேண்டு மண்ணல். (௧௦௨)

அடியரே முளத்தெ முந்துன் னடியமூந் தன்பெஞ் ஞான்று
மொடிவிலா திறுதி யாவிக் குறத்தகு மிடருற் றாலு
நெடிதுற வளர வேண்டு மமலநீ யருளு கென்னப்
படியுறப் பணிந்து பின்னும் பரவினன் பரனி யம்பும். (௧௦௩)

மைந்தநிற் கெனவொன் றோதா மாண்பினை பரோப கார
சிந்தையை யாகி வேண்டுந் திறத்தினி துவகை கூர்ந்தா
முந்தற மெவற்றி னுள்ளு முக்கிய மிதுவே யின்ன
துய்ந்தொளிர் சீவன் முத்த ரிலக்கண முணர்ச்சி மிக்கோய். (௧௦௪)

எவ்வகை யுயிர்க ளோனு மிறையுமோ ரிடருந் தம்மா
லெவ்வுயிர்க் குருக்ம யோம்பி யளிப்பது சீவன் முத்தர்
தெய்விக வியலென் றேதுந் திருந்துநூ லிதனின் மேலா
முய்வரு ளறன்வே றின்மை யுண்மையே வண்மை மைந்த. (௧௦௫)

சாற்றுமிப் பரோப கார தருமமே பெரிய தென்னப்
போற்றிதி காச மொன்று புகலுதுங் கேட்டி மைந்த
பேற்றினி லுயர்ந்த தேவப் பிரியனோர் விப்பி ரேசன்
றேற்றுமவ் வேதி யற்குந் திருமறு மருமத் தோற்கும். (௧௦௬)

முன்னிகழ் சம்வா தத்தின் முதுமறை யவனவ் விண்டு
தன்னெதி ருலகில் யாவன் சாற்றுகைம் மாறு நோக்கா
துன்னிய பரோப கார முஞற்றுவ னவன்பா லீச
னின்னரு ளுவகை கூரு மென்றனன் வினவு மாலோன். (௧௦௭)

நன்றுநன் றுலகில் யாவர் நயந்துதம் பொருட்ட லாம
லொன்றிய முயற்சி யேனோர்க் குஞற்றுந ருதுதா னிற்க
வென்றிவெள் விடையோ னற்றால் விழைந்ததி துவ தென்னே
தன்றனக் கலாமு யற்சி தரினவ ரறிவி லாரே. (௧௦௮)

தேவர்கண் முனிவ ரேனோர் செய்யருந் தவம னேக
மாவன யாவுந் தத்த மனுபவக் கலதொன் றுண்டோ
நீவிழைந் துரைத்த தொல்லா நிலையதென் றுரைப்ப மாலத்
தாவரு மறையோன் கூறுஞ் சாற்றிய தற்பு தத்தே. (௧௦௯)

அகிலநா யகனின் முன்னோ ரஞ்சியோ டோட வாட்டுந்
தகுவிட மயின்ற மாண்புந் தன்பொருட் டென்னை போலும்
மிகவிழைந் துறுநீ கீர வீரைபல் விடருற் றேய்ந்து
மிகவுறு தமுத மத்திட் டீந்தது மற்றே போலும். (௧௧௦)

மலையமா தவனெம் பெம்மான் மணப்பெருந் திருவோ லக்கம்
புலனுறத் தெரிசித் தேத்தும் புனிதவாழ் வையும் விடுத்துத்
தலையற னிதுவே யென்னுஞ் சமநிலை புடவிக் கீந்த
நிலைமுதற் புரிய னேக நிகழ்ச்சியு மற்றே போலும். (௧௧௧)

சாற்றுப மன்னி யப்போர்த் தகவனும் பகவன் சார்ந்து
போற்றிய கண்ணற் கின்பப் பூங்கழன் முடியிற் சூட்டித்
தேற்றுபு சைவ தீக்கை திருத்திமெ யருத்தி வாய்மை
யாற்றினிற் புகுத்த தாதி யனைத்துமாங் கற்றே போலும். (௧௧௨)

திருமுறை கண்ட சோழர் திறன்மனு நீதி கண்ட
வரசருட் சிபிவேந் தாதி யருட்பெருஞ் செல்வர் செய்த
பரிவெலா மற்றே போலும் பகர்ந்தது நன்று நன்று
சுரர்முனி வரர்மு னின்னோர் தூச்செய லுணர்ந்தி லாய்கொல். (ககந)

என்னுளந் தெரிய வோதிற் றென்றிது துணிந்தேன் பூவின்
மின்னுறை மருமத் தண்ணல் மேதகு பரோப காரந்
தன்னின்மேற் றரும மில்லை சாற்றிய துண்மை யாகு
மன்னது சுவார்த்த முற்று மளிக்குமே விசைப்ப தென்னும். (ககச)

என்றரிக் கனைய விப்பி ரேசனோர்த் தெதிர்ம றுத்தா
னன்றருண் மைந்த விங்ங னவிற்றிய பரோப கார
வென்றிமா தரும மேன்மை விளம்புவ தினியெ னென்னு
வன்றரு ளமுத நாத னருட்குறி யதிற்க ரந்தான் (ககரு)

திருவமு தேசன் முன்செய் திருவரு ளுன்னி யுன்னி
யுருகிய வுளத்த னுடைவ் வுறுவர்கோன் மிருகண் டும்ப
லொருவில்லான் சூத கானத் துறைந்தருண் மந்தி ரேசன்
மருமல ரடிமுப் போதும் வழுத்திவீற் றிருந்தான் மன்னோ. (ககசு)

வேறு.

வீற்றிருந் தமர்மிரு கண்டருள்சேய் மேலெழு மன்புள முந்தவெழுந்
தாற்றினி லெழுந்துறை மேற்றிசையோ ரருட்குறி யத்தளி யுண்ணிறுவிப்
போற்றியர்ச் சனைதினம் புரிதருமுட் புரிவொடு மச்சிவ லிங்கத்தைச்
சாற்றுப மார்ககண்ட லிங்கமெனச் சாற்றரி ததன்பெருந் தகைமையென. ()

செங்கையி னொளிர்தரு பொன்புரிவேத் திரப்படை யவனிவை யியம்புதலு
மங்கவை வினவிய சனற்குமர னடிகளு மடிதொழு மடியனெனைச்
சங்கையி னொழிவுற வருளுகெனத் தாழ்ந்திது புகலுவன் பெரியன்னை
பங்கனை யாம்பிர வனேசனெனப் பகர்ந்தனை யெந்தைம னிதுகாறும். (ககஅ)

மந்திர நாயக னெனும்பெயரு மந்திரின் மந்திரின் வழங்கினையான்
முந்தமி தானத்தின் பரியாய மோவிது வேறெனி லிடுகுறியோ
சிந்தைசெய் காரணப் பெயரோவோ திகழ்ந்த மேலதை விரித்தெளியேன்
புந்தியி னயிர்ப்பற வருளுகெனப் போற்றினன் முதைதன் புதல்வனரோ ()

வினவிய வேத்திரப் படைக்கரன்முன் விளம்புவன் கேண்மதி சனற்குமர
முனுஞ்சிறை யெனும்பெய ரதிருய்ய மாண்பொரு ளிறைதரு நிபநாம
மெனவுண ருதியிது தெளிதருவா னியம்புது மோரிதி காசமென
முனமவ னருளிய வாகேண்மின் முனிவர்க ளெனமொழி தருஞ்சூதன். ()

வேறு

இத்தகு மாகதை சொற்றவர் கேள்விய ரிச்சையர் சாதக ரெவரேனு
மெத்திய நீணிதி யுத்தம சேய்பல மிக்குய ராயுசு முதலாய
நத்திக வாழ்முழு துற்றயர் வார்சிவ நற்குரு வாரருள் பெறுவார்பின்
மித்தைய வாவொழி புய்த்துணர் வாரொரு மெய்ப்பர வீடெளி துறுவா
ரால். (கஉக)

மார்க்கண்டேயச்சருக்கமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ருகஅஎ.

---

# இராமன் மந்திரோபதேசம் பெற்ற சருக்கம்.

—:o:—

சூர்த்த காலை வென்ற சூனு துலங்கு காதை யோதினுஞ்
சீர்த்த ராமன் மந்தி ராதி திறங்கொள் வாய்மை யோதுவா
மார்த்த பாத வன்பு கூர வமர்ந்து கேண்மி யாவெனு
நார்த்த பாத நந்தி நாத னயந்து கூறு மாலரோ. (க)

வேறு

சனற்கு மார கேண்மியா தனக்கு மாரன் மைந்தனு
மெனக்கொண் மாய னூழுண மிழைத்த தீமை யீனரு
மனக்கொ ளாத பாதக மதித்து மாத வப்பிரு
குணக்கி தாகு மென்றமை யுலப்பி லாத யோனியில். (உ)

சென்று சென்று லகெனுச்செப்பு சாப முற்றுடைந்
தன்று சின்று வேண்டநீ யையி ரண்டு தோற்றமா
சென்ற வாணை லங்கன மெம்பி ரவை தன்றினி
நன்றி னுள்ளுந் தீமையு நவையி னுள்ளு நன்மையும். (ங)

ஆவ செய்கை வகையினென் பதுபி ரத்தி யக்கமே
யாவு நம்மி னோர்ந்தனம் யாது தான வக்குலம்
வீவ தாற்று நன்மையுள விளைந்த சாப பேர்கொடப்
பாவ நாமு ணச்செலுற் பவத்து ணன்மை வாய்ப்பதால். (ச)

நிருத ராதி துட்டர நீதி நீக்கி நீதியிற்
பொருவி லாத சிட்டரைப் புரக்கு நன்மை வாய்க்குமா
பிருகு சாப மீதருள் பிறந்த நோக்கி யான்றவர்
திருகு கோப முங்கலுஞ் செய்யு மென்ப தோர்ந்தனம். (௫)

என்றி வாதி யொவ்வொன்று யாவு மோர்ந்து ளாங்குணிந்
தன்ற யோத்தி வாழ்தச ரதப்பெ யர்க்கொ ளாற்றல்சால்
வெனறி நாம வேந்தர்கோன் விழுத்த வப்பெ ருப்பய
னென்றி னின்று வம்மென வுற்றெ றிர்ந்த லைத்திட. (௬)

ஆத வன்கு லங்கண்முற் றுற்ற ரும்பெ ருந்தவந்
தோதொ ழிந்த கோசல நாட்டி ருங்கொ ழுந்தவம்
பூத லஞ்செய் யாதவம் பொலிந்தொ ருங்கு மைந்திடக்
காதல் கொண்ட விந்தியை காத லென்ன ழுந்தனன். (௭)

உரைத்த வேந்தர் கோளரி யுசி மேற்கொ ளும்பலாய்த்
தரைத்த லத்து தித்தனன் றனய னக்கொ டாதைதன்
வரைத்த டப்பு யத்தினன் மகிசு மக்கும் வென்றிநாம்
விரித்த லென்ன வன்பெயர் விளக்கு மாற்றல் புற்றுமே. (௮)

அரசி ருக்கு மங்கை ரளவி லெத்து ணைத்திற
லரச ருக்கு மேனைய ரனைவ ருக்கும் போர்குறிப்பு
வரமு தற்க ணைக்கலையும் மருவொ ருமை சந்திதன்
வரமி குத்த பேரினல் வயக்கு மேனு மைப்பதென். (௯)

தன்னி கர்த்த தந்தைகர் தன்னின் மாலு தித்தபின்
றன்னின் மிக்க தென்னமுச சகங்க ளுந்து தித்திடு
மென்னி லன்ன சேயிமெண் ணிலாத சீர்த்தி யாதயொன்
றென்னி லாவ தேகொல்வே றியாவ ரானு மாவகொல். (௰)

அண்ட மியாவுந் தேசமும் மகா மியாவு முற்றும்வாழ்
தொண்டர் யாரு மாதவர் சுத்த யோகர் சித்தருந்
தண்ட னிர்க்கை யாருமைந் தரும்ப மித்தி டுங்களிப்
பெண்ட ரச்செய் நீர்மையா லிராம நாம மெய்தினன். (௧௧)

வேறு

தாம நாமமி ராம நாமமுன் சார மாலைகுந் தப்பிரான்
சாம னொருவருட் கந்த னென்வெனக் கவினெ டுகலை வளர்வே
யாம னுமென வுணாவ ருவண மனுட னுமென வளர்ந்தபின்
பூமன் யாமக னும்ப சிட்டனை போற்றி யாதர வேற்றியே. (௧௨)

போத நூல்பல கேட்டல் சிந்தனை புந்தி தேறுத லிட்டையே
யாதி யாவையு நிரம்ப வாய்ந்துகா மாதி யானவை யொருங்குநீத்
தேத மில்பொறை கருணை சத்திய மின்சொ லாதிய யாவுமெய்ந்
தோதொ ணாதசீர்ச் சீத வாசயா முறையி னுள்ளுறல் கெல்லாமுற. (கங)

அனுசர் மூவரோ டகன மர்ந்தரு ளன்னை தாதைசொ லவைமுடித்
தினிது மேவுழி முனிவ னாங்குவந் திளவ லோடணுகித் திடப்புகுந்
துனல ருந்திறற் றுட காவத முனுற்றி மேன்மிது லாபுரிப்
பொனையணைந்துவந் தன்னை தாந்தையைப் போற்றி வீற்றிருந் தானரோ. (கச)

வீற்றி ருக்குநாள் வேலெரார் நாணணி விரும்பு தாதைசொல் கரும்புதேன்
போற்றி தித்துடல் பூரித் தொண்செவிப் புகுது முன்னெழீஇப் போம்பிரி
வாற்றொ ணாதுரு கிளவல் சானகி யடிதொ டார்ந்திடக் கடிதுசென்
றேற்ற கானக வாச மேகமக் கென்று முள்ளதென் றேகினன். (கரு)

கருத்த மாமர பிலங்க வந்தருள் காளை மேகிய கானனை
மிகுத்த நம்மதி தெய்வ மானிட மேனி கொண்டிவண் மேவமுன்
னுருகுத்த மாதவ மென்கொ லென்றளி துலங்கு நாண்மலர் முகங்கணீ
ருகுத்து நீடலை வணங்கி யொண்பதத் தொழிவ ருமலர் பொழிவன. (கசு)

மானி னம்பல பின்பு சானகி வாஞ்சை தீர்தொ றுயா மெழு
மானி னம்பல வந்தோ பாலனென் றறிந்த போனனி யார்ந்தெழுந்
தேனி னம்பல விறைபி தாவனத் தெரிந்த போலவை செப்பெழும்
வானி னம்பல மேனி கண்டின மாமெ னத்தொடர் வானெழும். (கஎ)

வேழ நங்குலங் காத்த தெய்வத மேய தென்றெதிர் வீழ்ந்தெழுந
கேழ னம்முரு மேற்கொ ளுதனைக் கிட்டி மேருவெமை நீளர்ந்தெழும்
பாழி யாவரி நாம மெயவுற் பவதி தோவெனப் பதந்தொழும்
வாழ்கு டாவடி யாம்ப வன்பினர் வணங்கல் போர்பதம ரைத்தொழும். (கஅ)

குணங்க ளீள்குழு முனிமூ மேனெருகு குலாதி பண்புதந் திவ்வளிளி
யணங்கு முற்றெழிழித் தின்ப வீடரு ளாந்தெ ழுத்துப தேசநன்
மணங்கொளுஞ்செயல் வாய்க்கு மாண்பினை மனங்கொ ளற்கொர் நித்தமா
யிணங்கு தாரக சகித வைநதெழுத் திதழி மாமலர் காட்டுமே. (க௯)

நெடிய நீகுறு முனியைத் தாழ்ந்திடர் நீக்கு கென்றுட னேவல்போ
னெடிய பூருக நிரையி ராகவ னீள்க பூற்கணி றைஞ்சுமால்
கடிய மௌவல்சே வடிப ணிந்துன காதன் யாமன்கை வாளியாயக்
கடியை யென்மூல கோது றும்பழி கடத்து கென்றலிற் கவுமாக். (உ0)

இன்ன கானனத் தேகி ராகவ னிளவல் சானகி பின்வர
முன்ன ரேபல வளங்கள் கண்டுமென் மொழியு வப்புறக் காட்டுபு
மன்னு தண்டக வனம்பு குந்தவண் வாழு மாதவர் சூழல்வா
யின்ன மந்தவ ராசி பெற்றினி தேகி மாமல யேசன்வாழ். (௨௧)

உடச முன்வின விப்பு குந்தவ ணெண்ம லர்ப்பதந் தாழ்ந்தெழுந
தடிக ளும்மடி யடிய னேன்றெழுற் கடியின் மாதவ மென்மெனாத்
தடம லர்க்கைகு வித்து நின்றதா சரதி யானன நோக்குபு
நெடிய பானுகு லேச மாசறு நின்வ ரத்துநல் வரத்தென. (௨௨)

முகமன் பற்பல கூறி யாசிகண் மொழிந்தி ருத்துபு முனிவாழ்
தகவி தெம்மனோர்க் கேய டுத்தத சரத சக்கர வர்த்திமா
மகனி னக்கிவண் வரவ டுத்ததெம் மாதர் மாதவங் கோதிலா
துகம்வ ழுத்தநன் றியலு மாறிட னொழித்த னிப்பகை யுன்னியோ. (௨௩)

வேறு.

மைந்த நின்னிள வடிவு நோக்கலை மல்கு பல்லுறு வகையு நோக்கலை
தந்தை தாயர்போற் றுதலை நோக்கலை சார்வ பௌமனீ தமியை போலவே
யிந்த மாவனம் வந்த காரணம் யாதி யம்பென வெழுந்தி ராமனு
மந்த ணாளவொ லார்க்கு மோரர சருந்த வத்தினே ரரசு நீயரோ. (௨௪)

அகில லோகமு மடிப ணிந்திடி னவர வர்க்குள குறைகண் முற்றொழித்
திகந லங்களும் பரந லங்களு மிணையின் மோக்கவா யிலும ளித்திடத்
தகுமொர் பேரர சாய நீயொரு தமிய னேனையு மரசனென்பதோ
நகையி தாகுமெம் மரச லக்கண நவின்ற துண்மையே ரசமி லாதவன். (௨௫)

என்னு மர்த்தயேல் யான்மெ காளத்தகு மெந்தைநின்னர செந்தநாளினு
மன்னு சத்திய சுகவி பாபக வாத மாசில ஞான வானர
சென்னி மேலுறை யோனி னைப்பதெங்ஙனமென் றமைந்து தன்னசர் ன்றேகிய
தின்ன தென்றுமுற் றிமைத் துமேலுமோரேழை விண்ணப்பமொன்றிருச்செவி.

சாத்தி யாருக தானு மேவகர் சதுர முற்றுணர் சாந்த வேத வென்
றேத்தி நின்றெதி ரோது மையவிங் கெத்து ணைத்தவந் தான மாதியி
னீத்தி டற்கரும் பவஞ்ச வாஞ்சையா நிறைக டற்கடந் திடுமு பாய மொன்
றோர்த்தி தீர்தர வருடி யாமென வடிப ணிந்தன னலரி மைந்தனே. (௨௭)

அதுவி னைய்மல யாச லத்தமை யாள கத்திய மாமு னீந்திரன்
கதிர்கு லாதிப புத்த மக்குண கணங்கள் சேர்கரு ணால கேண்மதி
யதிர்க டற்புவி யாளு பாயமுன் னுய காமுறு மாச ருள்ளக
மெதிரி லாமறை சிவாக மந்துணிந் தியம்பு மந்தண மினிது கேட்டனே. ()

முதுவ சிட்டனிற்குணர்த்துபோ தகன்முதுக்குறைந்தெழுசனகன்மாதுலன்
மிதமில் கேள்வியெய்ண் கதிரின் மைந்தனீ விதைத்ததொன்றுபின் விளை
வொன் ருகுமோ, வதிவி ருப்பான் கேள்வி யின்னமக் கைய துய்யவான்
மெய்ய செய்யவள், பதியு னக்கிது பகரும் பாக்கியம் பலித்த தின்றெமக்
கென்று பன்னுமால். (௨௯)

சாதி யாச்சிர மாதி யொன்றினுஞ் சுவறி லுத்தம ஞான சீலராற்
காதல் கூர்சமு சார சாகரங் கடந்த ருட்கனை யிவர்ந்து வாழ்வுறற்
கேத மின்னிக மாக மந்துணிந் தீச னேயெவ ரினுந்தி யேயனென்
ரேது மாபதி யொருவ னேயுள முருகு பூசனைக் குரிய நாயகன். (௩௦)

அகில முந்தன துடைமை யாகவைத் தாளு மீசனுக் கனைய பூசனைத்
தகுப ணிக்கண லாதி யாதினுஞ் சாரு மார்வமொன் றில்லை யாதலா
னெகுழு ளத்தொடு மகம்பு றத்தினு மிகம வாகம முறைவ ழாமலப்
பகவ பூசனை யாற்று வானெவன் பவஞ்ச வாரிதி பாற்று வானவன். (௩௧)

அனைய பூசனைக் கின்றி யேயமை யாத முக்கிய மாகு மங்கமொன்
றனைய தென்றிடி லரிய மந்தண மினிய தோதுதுங் கேளி ராகவ
வினையை வெல்வது பவஞ்ச நீர்த்தட மேலெடுப்பது வேத வொண்சிரந்
தனைய டுத்தமெய்ப் பரசி வத்தின தனிச்சொ ரூபரிச் சயார்த்த பூரிதம். ()

பரம வாசக மாயொ ளிர்வது பஞ்ச பாதக நாசஞ் செய்வது
வரம காசிவ ஞான சாதன மந்தி ரேசமாய் வயங்கு நீரது
திரம சாத்தியந் தேவர் மாதவர் தேர்ந்து ளோர்க்குமே செப்பு தற்கது
வுரமன் மத்திய மறையின் மத்திய வுருத்தி ரத்தொளி விரித்த ரத்தினம்.()

ஆய ரத்தினந் தூய மெய்த்திரு வைந்தெ ழுத்தென வறிய வோதுமான்
மேய வன்னமா மந்தி ரேசனின் மிளிர்செ விக்கணே குளிர வுய்க்குதும்
வாய விம்மநு நீகொண் முன்னரே மற்ற தற்கொரு முக்கி யாங்கமுந்
தோய வேண்டுமென் னதும னுச்சக தூய வெண்டிரு நீறு தாரணம். (௩௪)

பூதி தாரண மின்றி யிம்மனுப் புகலி னிட்பல மென்னு மாமறை
யாத லால்விர சாங்கி யின்விளை வாய சித்திதா யகவெண் ணீற்றினை
யோது நான்முறை பரவப் பூசிமே லொளித ருந்திரி புண்ட ரங்களு
மேதி லாதணி கென்று கூறியாங் கிசைத்த வாவிர சாங்கி நீற்றினை. (௩௫)

முறைவி ளைத்தெடுத் தள்ளி யீதலு மூளரி கூம்பிநேர் மலர வாங்குபு
நிறையுத் தூளன புண்ட ரங்களு னெறிய ணிந்தெதிர் முறைப ணிந்தனன்
கறையி லாமனத் திறையி ராகவன் கலச யோனியக் காகுத் தன்றனைக்
குறைதெ றுஞ்சிவ தீக்கை யாற்றுப் குறித்த மந்திர வுபது குத்தனன். ()

தூய தன்செவி வாயு குத்தவச் சுவைய மந்திரா ரமுத மாந்தினன்
வாய பேரின்ப வாரி யிற்றனை மறந்த மர்ந்தொரு வாறெ ழுந்துட
னேய வாரியன் பாத தாமரை நேர்ப ணிந்தடிக் கடியெ ழுந்துநின்
றேய்வி லாக்கரு ணைம்பு தேயென துடனு மாவியு முடனு முன்னதே. (கூஎ)

செய்கை மாறிலாச் சிறிய னயினேன் செய்கை மாறுநின் றிருவ ருட்பெருஞ்
செய்கை கொள்கிலாச் சீரி தென்பது சேற்ற மாகநேர் தெரிய வந்ததென்
றுய்கை பெற்றசீ ராம னேதவவ் வுடச ஞதனுங் குடச மாதவ
னுய்கை செய்சிவ நாம மாயிரத் துண்மை யாவையு முணர நல்கினன். (கூஅ)

அச றச்சிவ தத்து வார்த்தங்க ளனைத்து முள்ளகத் தமையத் தேற்றிமே
லீச னேயொரு வன்றி யேயன்மற் றேனை யோர்களெவ் வெவருஞ் சீவரே
மாச றத்தியா தாக்க ளென்றமா மறைசொல் சூத்திர வாக்கி யந்தனைத்
தேசு றத்தனி யோது மாசிவ கீதை நூலையுந் தெரிய நல்கினன். (கூகூ)

இன்ன வாறகத் தியமு னீந்திர னிராம னுசகுரீ றளித்த மேன்மையாற்
றுன்னு றும்பசுத் துவத்தை மாற்றிமேற் றலங்கு தாரக சகித வைந்தெழுத்
தென்னு மந்திர செபத்தி னேர்சிவத் துவவி ளக்கமே லேற வேற்றியப்
பன்னு மந்திரஞ் செபித்தி யம்முறை பாசி வார்சசனை விதியு ணர்த்திமேல்.

வேறு.

பொறுதி யாகநாம் புகன்று ணக்குமுன்
பெறுதி யென்றமெய்ப் பேறு கொள்கவென்
றிறுதி நீக்குமைந் திருஞ்சா தாக்கியத்
துறுதி லிங்கமொன் றுரவிர நல்கினன். (சக)

இரவி மைந்தகே ளிவ்வி லிங்கநீ
யுரிய வாயுள்கா றொருவு றுமலே
பரவி நாடொறும் பயில்ரு சசனை
வரசி வாகம மரபி னூற்றுதி. (சஉ)

மேவு மிவ்வெலாம் வேநத நிற்கக்
காவ லாய்புறக் காவ லாகவிங்
கீவ கொள்கெனு மேவுதி கார்முக
மாவ நாழியாங் கவன்கை நல்கினன். (சங)

சருவ சத்திமா ருய சங்கர
னொருவ னேசிக ராய புத்தமன்
றருச ராசனந் தாவி னுந்தகம்
பொருவி லாவநேர் புகலற் பாலதோ. (சச)

மூன்று நல்கிய முனிவர் சேகர
னான்ற கேள்விய னாய ராமனைச்
சான்ற பஞ்சவ டித்த லத்தைநீ
யேன்று காண்கென வினிது கூறினான். (௪௫)

முனிவ ருத்தமன் மொழிந்த செஞ்சொலு
மனைய னங்கிரி யம்பு சாதிமுந்
தனது சென்னியிற் றழைப்ப ராகவ
னினிதி றைஞ்சின னேத்தி நின்றனன். (௪௬)

பிரிவை நோக்கிடும் பெரிது மேங்கிடும்
வரதன் வாசக மறுக்கொ ணாமையும்
பெரிது நோக்கிடும் பேதுற் றஞ்சுமத்
தரணி பன்றிறஞ் சாற்றொ ணாதரோ. (௪௭)

அரிய நூல்களாய்ந் தகன்றெ ளிந்துமெய்க்
குரவ ரானிறை குணத்தி ராமனே
பெருமி டர்ப்படிற் பெரிய வர்ப்பிரி
வருமை யிற்றென வளக்க லாவதோ. (௪௮)

இருத லைப்படு மிதய ராமனா
கொருத லைத்துணிந் துழுவ லன்புளம்
பொருத லைப்பெரும் புணரி வாயனை
மருத லைப்புரீஇ வணங்கி யேகினான். (௪௯)

ஏகி ராகவ னிளவல் சீதையோ
டாகம் வேற்றுமை யறியொ ணாதுநீண்
மாக நீடுகான் வழிக டந்துபோ
யோகை மிக்கபஞ் சவடி யுற்றனன். (௫௰)

வேறு

வாம டுத்தகோ தாவரி மாநதிக்
கரைய டுத்தவப் பஞ்சவ டிக்கணோ
புரையி ரித்த புனிதனி ராகவன்
விரவி யொத்துழி வீற்றிருந் தானரோ. (௫௧)

அங்க ணாடொறு மைந்தெழுத் தின்செபந்
திங்கள் வேணி யிலிங்க சிவார்ச்சனை
துங்க கீதை பாராயணந் தோமற
நங்கை சானகி நாத னவிற்றுபு. (௫௨)

நாளு நீளுமெய் யன்பு நதியொடே
யாளு மீச னருட்கடற் புக்குலாய்த்
தாளின் ஞானங் தத்தனித் தண்சுதை
மீளி யுண்டு விளக்கமிக் கானரோ. (ருங)

இன்ன வாறுசின் னாள்க ளிரிந்திட
மன்னி ராமனை யாஞ்சித் திராவணன்
பின்னை சேர்ந்து பிதற்றின னன்னதாற்
றன்ன நாசி தனஞ்சிதை யுற்றனள். (ருச)

அதனி ஞற்கர தூடண ரார்த்தெழ
வதைபு ரிந்தங் கிருதர் வருதினி
சிதைய வென்றமை தேர்ந்தங் கிராவணன்
கதமி குந்துமா ரீசன்ச காயத்தால். (ருரு)

எரி நெருப்பை மடியிலிட் டாலென
வரிய கற்பிற் கரசி யணுவுந்தற்
பிரியொ ணாத பிரியை சனகியைக்
கரவி லாற்றுக் கவர்ந்தனன் காதகன். (ருசு)

அவனி மாதவ மாய பிராட்டியைக்
கவர்பு சென்றபின் காகுத்தன் றம்பியோ
டவச னாய்ச்சரித் தங்கதர் காட்டிடச்
சவரி யஞ்சனை தன்றனை யன்றனும். (ருஎ)

சுக்கி ரீபனைத் துன்னி யவன்பகைத்
தக்க வாலியைத் தான்செகுத் தாங்கவன்
ஒக்க லோடுறு வாழ்வங் குதவவம்
மிக்க பேருத விக்குள் ளுவந்தரோ. (ருஅ)

ராக வன்செய் நன்மற வாமலன்
போகை யுந்த வுடன்வட மேருமுன்
னாக நீளச லத்தயர் வானர
வாகி னிக்குல முற்பு ட வருசென. (ருகூ)

வாலி னித்துத யாத்த மனவரை
விரவு திட்டிசை மேற்றிசை யாசகம்
பரமன் வெள்ளிப் பருப்பதங் கூற்றினார்
வரையி னுத்தர யாமிய வம்பலா. (சு0)

வினவி ராகவன் மீக்கெழு மூக்கமோ
டனகி யாய சனகி யமர்சிலை
துனையி னேகித் துறுமிடர் மாற்றியாங்
கினிது மீட்டற் கெழுந்தனன் முன்னெழும். (சுகூ)

தம்பி பானு தலைய னனுமனே
பம்பு வானர வீர பதாதியோ
டும்பர் போற்றுற வொல்லையி னண்மிறு
னம்பி ராயன் றொறுத்து நகலையே. (எ0)

வேறு.

ஆங்கரு மறைகள் போற்று மட வியி னகில மீன்ற
தேங்குயாழ் பழித்த வின்சொற் றிருந்திழை பாகத் தெய்மான்
பூங்கழ லிறைஞ்சும் வாஞ்சை புகுத்தவா னரப தாதி
பாங்குற தவனி ருத்திப் பானுசே யனுமன் றம்பி. (எக)

புடைவரக் குணக்கி னின்கோ புரப்பெரு வாயின் முன்னார்
படியுற நமந்து வேண்டிப் பரவிப்போய் வேத தீர்த்த
முடியுற வணங்கி மூழ்கி முறையின்வெண் ணீறு கண்டிக்
தொடைபுனைந் தெழுத்தோ ரைந்துந் துகளறச் செபித்த லாதி. (எ௨)

நித்திய நியமம் யாவு நிகழ்த்துபு நிராத்த மாதி
சுத்தகேத் திரபிண் டாதி துரிசறப் புரிபுட் சென்றாங்
கத்தனை யமல வேதா ரணியனை யகில மூல
வித்தனை வீணை கான வி?டணி யுடனி றைஞ்சி. (எங)

அகநெகிழ்ந் துருக நின்றாங் கருந்ததி பலமுன் கூறி
யிகலருமன் பின்மேலு மிறைஞ்சியாங் கரிது நீங்கித்
தகுமுழி யமர்ந்து வாயு தனயன்முன் னுறங்கு பக்கின்
றொகையினை யாழி மீதோர் தூக்குரம் பிலங்கைக் கேசு. (எச)

ஆற்றுக வெனப்ப ணித்தா ணுணைதஞ் சென்னி மேற்கொண்
டேற்றெழு கவிக ளெல்லா மிரவிதோ யிரவி வான
மேற்றழை விருக்க மாதி வேரொடும் பிடுங்கிப் போகட்
டேற்றவார் கலியிற் சேதோர் தினத்தின்று சனையேழ் செய்தார். (எரு)

வரம்பறு வலிமு கத்த வலிமுக பலசை மூகம்
வரம்பறு பரரை வானின் மரம்பல கரும்ப னேகம்
வரம்பறு மாழி மீதோ ராதுவீழ்த் தியவே கத்தாற்
வரம்புறு தடையாற் பொங்கி வருபிர ளயமோ வென்ன. (எசு)

பிரவகித் தியாண்டுஞ் சென்றெம் பிரானிகே தனத்தி னீள்கோ
புரதுவா ரத்துஞ் சென்று புகுதலப் பொழுதி யாரு
மரகர முழக்க மேலோ ரார்கலி யென்ன வாய்விட்
*டரகரன் சினக ரத்து ளச்சமுன் னீர்ப்பப் புக்கார். (௭௭)

புக்கவ ரண்டம் விண்டாற் போன்மெனக் கதறு மோதை
யக்கணந் துரந்திச் சென்றாங் கரர்கலி கோயில் வாயிற்
றொக்குளார் கலிப்பே ரோதை சூரலங் கரத்தன் காணு
நக்கன னுரப்பி னென்மன் னநலீ வரவை யென்பான். (௭௮)

நந்திநா யகனுங் கார நாதமச் சேது வேறுய்ச்
சிந்திய தகர்த்த தாழி சென்றடங் கிற்று முன்போ
லந்தில்வா னரக ணங்க ளச்சமிக் குலைந்த நோக்கி
னைந்திரா கவன்பின் மேல்பா னென்கியோ சனைசென் றாங்கு. (௭௯)

பின்னரு மன்னு கென்றோர் பேரணை யமைப்பித் தான்மற்
றன்னதும் பெருங்கான் மீன்க ளலைகளா னிலைகு லைந்த
தென்னினிப் பரிது மென்று வேக்கரிக் குளங்க லங்கி
யின்னதென் றொன்றுந் தோன்ற திருந்தன னிராம னந்த. (௮௰)

அப்புதி தடத்தின் பாங்கோ ரகரமீன் பூச மென்ன
விம்பரின் விளங்கும் யாண்டு மிடரற வியல்வான் மீன்க
டப்பெரு வாலிற் சேது தனையடித் துடைத்த நீரா†
னப்பியவ் விராமன் முன்பின் னவிற்றமக் குயப்பி ரண்டும். (௮௧)

சிதையுறப் பெற்றும் வாய்மைச் சுரற் குணங்க ளாதி
யிதம்மிகு புனித ராம னியற்றிய தீரா வென்ன
ததைகுரம் பமைந்த வாழித் தடம்புன லிடமி ரண்டு
துதிதிகழ் கோடி தீர்த்த மெனும்பெயர் துலங்க மன்னும். (௮௨)

முன்னவில் கோடி தீர்த்த மூதுமறை வனபு ராணந்
தன்னலன் விரித்துக் கூறத் தயங்கும்பின் னவிறீர்த் தத்தை
மன்னல மணமேற் கோடி தீர்த்தமென் றுலகம் வாழ்த்தி
யின்னலங் கொழிய மூழ்கி யின்னல மெல்லா மெய்தும். (௮௩)

---

* அர - குறிற்கீழாகாரங் குருகிற்று.

† நீரால், விளங்குமென்றியையும்.

காண்டலுங் கரண மெல்லாங் கைநெகிழ்ந் திரிய வன்பு
பூண்டவன் றனது போதம் போய்ச்சிவ போத பேத
மாண்டமெய்ஞ் ஞான னந்த மயபர வசனாய் நீண்ட
சேண்டரு வடியற் றுங்குத் திருமுன நமந்த மர்ந்தான். (௯௮)

எழுந்தொரு வாறு முன்னின் றியம்புவாய் குழறக் கண்ணீர்
பொழிந்துட னனைப்ப விம்மிப் புரிவதொன் றோர்தல் கூடா
தழுந்துமா னந்த வெள்ளத் தரிதெழும் வழக்கி லீழ்ந்
தொழுந்தகை யிராம னுங்கச் சுயம்புநே ருற்ற தாய்மை. (௯௯)

இன்னவா றென்ன யாரே யிசைக்குநர் நெடும்போ திங்ஙன்
பன்னருந் திறத்த மைந்த பானுகு லேச னெம்மான்
றன்னரு ளதனா லாற்று சபரியைத் தொண்டினோர்வந்
துன்னவேண் டுவன வெல்லாந் தோமற வினிதி னீட்டி. (௧00)

உழுவலன் போங்க மேன்மே லுயர்சிவா கமநூ லாற்றின்
வழுவறச் சுத்தி யாதி வயக்கிவெற் பளித்த தாயோ
டழலவிர் மேனி யெந்தை யருந வி நேசன் றாய
கழலடி பூசித் துள்ளங் களைந்தடிக் கடிந மந்த. (௧0௧)

திருமுனின் றினிய வாய்மை திகழ்துதி புகன்று வேண்டு
மொருவனே யோவா மூவ ரும்பனே யெய்பி ரானே
யருவனே யுருவ னேநா யருவுரு வனேய தீதத்
திருவனே சூதகானச் செல்வனே போற்றி போற்றி. (௧0௨)

உலகனே யுலகெ லாமா ளுடையனே விடைய னேயன்
பலகனே யலகி லானே யமலனே விமல வன்பர்க்
கிலகனே யிலகி லானே யேனைய ரெவர்க்கும் வானோர்
திலகனே சூத கானச் செல்வனே போற்றி போற்றி. (௧0௩)

ஆரண முதல்வ போற்றி யாரணன் முடியாய் போற்றி
தாரண நீற்ற போற்றி தாரணி பவஞ்ச போற்றி
பூரண கால போற்றி பூரண நூல போற்றி
சேண வளங் கான நேசச் செல்வ போற்றி. (௧0௪)

திருவுருப் படிக மோர்வத் திாமது செம்பொ னென்று
கருமையான் றருண மொனறு கருதுபா னிறமொன் றுநின்
னுருவமே துணிதல் கூடா துறிலுன சொரூபம் யாரோ
தெருளுவர் சூத கானச் செல்வனே போற்றி போற்றி. (௧0௫)

பூங்கொம்பொர் கவிதன் பாங்கர்ப் பொன்னிறம் பழுத்த வின்றே
மாங்கனி கொடுசென் றுற்ற மந்தியை வாலி வீட்டி
யாங்கது கைக்கொண் டேகி யமர்பணை யமரக் கண்டா
னீங்கிது போனி மித்த மெமக்குவே றென்கொ லென்றான். (௯௧)

செறியுல கடவிக் கெல்லாஞ் சேகர மென்னு மேன்மை
யறிதரத் தெருட்டு சேக ராடவிச் கணிய ளுகப்
பெறபுமாங் குயிலெ லாமெம் பிரானரு ளுவந்தி ராம
வுறுதியிங் குறுதி யென்றாங் கழைத்தென வொலிப்பச் சென்றான். (௯௨)

பூவைபைங் கிள்ளை சாய்ப புராதன புனித னேமா
தேவசங் கரசம் போசச் சிதாநந்த வமுத நாத
சேவக விமல சேம சேகர மந்தி ரேச
மாவன ந்வாச தேச மாதவ பூத நாத. (௯௩)

கண்ணமர் நெற்றி யானே கந்தா கந்த ரேச
தண்ணம ரிதழி வேணித் தற்பர சைல ராசன்
பெண்ணா சகில மீன்ற பெரியநா யகிச மேத
வண்ண றுஞ் சூத கான வாதவென் றிசைப்பக் கேட்டான். (௯௪)

இன்னன பல்ல நங்க ளெண்ணில கண்டு கேட்டுப்
பன்னருங் களிப்பு மேன்மேற் பல்கியு போன் புந்த
முன்னரு ளீர்ப்பச் சென்றம் முளரியின் வருண தீர்த்தந்
தன்னினுன் மாபி ளுடிச் * சபலவெண் ணீறு சாத்தி. (௯௫)

கண்டிகை பலபூண் டைந்தக் கரமுறை செபித்து நீல
கண்டனீ ணிகேத னத்தங் கைத்தலப் பிலகொண் டேகிக்
கண்டருட் டூல லிங்கங் கைதொழு திறைஞ்சி யின்சொற்
கண்டமர் வல்லை நேச கணேசனை யிளைய சேயை. (௯௬)

பணிந்துநந் தீசற் போற்றிப் பராயனு மதிபெற் றேகித்
தணிந்துசே கரசு கங்கா தாவமு தேச நாம
மணிந்துல கருளா சிற்கு மருந்துணை திருந்து வேதந்
துணிந்துரைப் பரிய சோதி சயம்பிலிங் கேசற் கண்டான். (௯௭)

---

* முன்னிரு நெடிலுங் குறுகிலவாக் கொண்டு சாபால வெனக்கோடலு மொன்று.

காண்டலுங் கரண மெல்லாங் கைநெகிழ்ந் திரிய வன்பு
பூண்டவன் றனது போதம் போய்ச்சிவ போத பேத
மாண்டமெய்ஞ் ஞான னந்த மயபர வசனாய் நீண்ட
சேண்டரு வடியற் றுங்குத் திருமுன ஈமந்த மர்ந்தான். (கூஅ)

எழுந்தொரு வாறு முன்னின் றியம்புவாய் குழறக் கண்ணீர்
பொழிந்திட னனைப்ப விம்மிப் புரிவதொன் றோர்தல் கூடா
தழுந்துமா னந்த வெள்ளத் தரிதெழும் வழுக்கி வீழ்ந்
தொழுந்தகை யிராம னுங்கச் சுயம்புநே ருற்ற தூய்மை. (கூகூ)

இன்னவா றென்ன யாரே யிசைக்குநர் நெடும்போ திங்ஙன்
பன்னருந் திறத்த மைந்த பானுகு லேச னெம்மான்
றன்னரு ளதனா லாற்று சபரியைத் தொண்டினார்வந்
துன்னவேண் டினவெல் லாந்தோ மறவினி திணீட்டி. (கoo)

உழுவலன் போங்க மேன்மே லுயர்சிவா கமநூ லாற்றின்
வழுவறச் சுத்தி யாதி வயக்கிவெற் பரித்த தாயோ
டழலவிர் மேனி யெந்தை யமுதவிங் கேசன் றூய
கழலடி பூசித் துள்ளங் களைந்தடிக் கடிந மந்த. (கoக)

திருமுனின் றினிய வாய்மை திகழ்துதி புகன்று வேண்டு
மொருவனே யோவா மூவ ரும்பனே யெம்பி ரானே
யருவனே யுருவ னேகா யருவுரு வனேய தீதத்
திருவனே சூதகானச் செல்வனே போற்றி போற்றி. (கoஉ)

உலகனே யுலகெ லாமா ளுடையனே விடைய னேயன்
பலகனே யலகி லானே யமலனே விமல வன்பர்க்
கிலகனே யிலகி லானே யேனைய ரெவர்க்கும் வானோர்
திலகனே சூத கானச் செல்வனே போற்றி போற்றி. (கoக)

ஆரண முதல்வ போற்றி யாரணன் முடியாய் போற்றி
தாரண நீற்ற போற்றி தாரணி பவஞ்ச போற்றி
பாரண காள போற்றி பாரண நல போற்றி
சேரண வமல கான சேசரச் செல்வ போற்றி. (கoச)

திருவுருப் படிக மோர்வத் திரமது செம்பொ னென்று
கருமையொன் றருண மொன்று கருதுபா னிறமொன் றுநின்
னுருவமே தணிதல் கூடா துறிலுன சொரூபம் யாரோ
தெருளுவர் சூத கானச் செல்வனே போற்றி போற்றி. (கoரு)

அவனவ ளதுவொன் றன்றென் றருமறை யிசைப்ப தன்னை
யவனவ ளிரண்டு மொன்றி யவிருமோ ருருவாய் நிற்றி
யவனெனப் போற்று கோமற் றவளெனப் போற்று கோமன்
சிவசிவ யாதென் றோர்துஞ் சேகா வனத்தாய் போற்றி. (சoசு)

அரிபிர மேந்தி ராதி யகிலசீ வருமோ ரொன்றே
யுருவமுநீ றுநித்துண் பாலே யொடுங்குவ ருவர்க்க நீதப்
பொருளென விருமை யாகின் பொன்னுரு விடத்துங் கண்டுந்
தெருளிலா மூடர்க் கென்னோ தேற்றமா வனத்தாய் போற்றி. (சoஎ)

அருநர காழு மூழா லளவில்கா முகனென் றந்தோ
வுருவுகண் டரைசிர் மூடர்க் குரைப்பதெ னூடல் கூட
லொருவடி வினிலெங் கெய்து முணர்த்தினீ யன்றி யாவர்
தெருளுவர் சூத கானச் செல்வனே போற்றி போற்றி. (சoஅ)

சீவர்க ளெவரு மின்பந் திளைத்திட விதஞ்செய் தேவ
பாவியேற் கின்று போந்த படலெலாம் படர வீட்டி
யாவிகாத் தருடி யைய வரணநின் சரண மேமா
தேவனே சூத கானச் செல்வனே போற்றி போற்றி. (சoகூ)

வேறு.

என்று போற்றிசின் றடிக்கடி யிறைஞ்சின னிராம
னன்று மாதவ னனியுவந் தமுதலிங் கத்தி
னின்று மிந்தமர் வேணிய னீலமா மிடற்ற
னொன்று நாற்கரன் சாம்பனேற் றிவர்ந்தரு ளொருவன். (சகo)

உளத்தின் மிக்கெழு முவகைநே ருணர்த்துமொண் முறுவல்
வளத்தி னன்சிர மாலிகா பரணன்பால் வண்ணன்
கிளத்து மித்தகு முருவனுக் கிடைத்தனன் றனையுட்
டளத்தி ருத்திரா மனையருேணக்குபு சாற்றும். (சகக)

வருதி ராகவ கேண்மியா மலயமா தவன்முன்
கருதி நிற்குணர்த் தியவரு ளெறியதே கவற்சி
தருதி றற்பவ சாகர தரணவாஞ் சையர்க்குச்
சுருதி சொல்லுபா யம்மிது சுத்தநிர்த் தோடம். (சகஉ)

இதயத் தான்றுக வின்னதே யென்றுமீ திருக்கத்
ததையற் கூந்தலஞ் சானகி பிரிவினிச் சமய
முதயச் சூானை முகின்மறைத் தாலென வுன்பாற்
றுதையப் பேரிடர் தொலைப்பதற் குபாயமுஞ் சோறும். (சகங)

ஈண்டைக் கோசலை யெட்டினிற் றென்றிசை யிலங்குஞ்
சேண்டக் கார்தொழு தேவிபட் டணத்திரு நகர
மாண்டைக் கேகிநீ யலகில்சத் திகளுட னமருந்
தேண்டற் பாலளாம் விந்தையைச் சிந்தைசெய் தன்பால். (கக௪)

ஆழி மீதணை யணைதிறன் குறித்தனை யருச்சித்
தாழின் வேண்டுதி யேலணை யுஞற்றுதற் குரிய
பாழி யாற்றறந் தின்னருள் புரிவளப் படியே
வாழி ராமநீ யவ்வழிக் குரம்பினை வயக்கி. (கக௫)

ஆய பேரணை வழிச்செலீ இ யிலங்கையை யடைந்து
தீய ராவண வதம்புரீஇச் சீதையை மீட்டு
மேய விந்திர வரத்தினாற் போர்வயின் விளிந்த
பாய வானர கணமுயிர்த் தெழும்வகை பயிற்றி. (கக௬)

உரிய சீதையோ டிளவல்செங் கதிர்மக னாதை
பிரியன் வானரப் பெருந்தொகை பீடணன் முன்னோர்
விரிபு சூழ்வர விரைகமழ் புட்பக விமானத்
தரிதி வர்ந்துசென் றயோத்தியிற் பரதனோ டமர்ந்தே. (ககஎ)

நீதி வேத்தியல் புரிந்துவீற் றிருந்துயிர் நிரைகாத்
தேதி லாமகஞ் சிவப்பிர திட்டைக ளியற்றிக்
கோதி லிச்சிவார்ச் சனைதினம் வழுவறக் குயிற்றிப்
பேதி யாதவிப் பல்வகைப் பெருந்தவப் பேற்றால். (ககஅ)

ஈற்றி னம்பதத் திரண்டறு நித்திய வின்பப்
பேற்றின் வாழ்கென வாய்மலர்ந் தருளியெம் பிரான்முன்
றோற்றி யாங்கருட் குறியிடைக் கரந்தனன் றொழுது
போற்றி ராகவ னளப்பருங் களிப்பெரும் புணரி. (ககக)

தோய்ந்து மந்திர லிங்கபச் சிமத்தொரு தூய்மை
வாய்ந்த லிங்கமார்க் கண்டலிங் கத்தணி வடபா
லாய்ந்து தாபனம் புரிந்தருச் சித்துமீண் டணைபா
லேய்ந்த வாரமூ தேசனைப் பினும்பணிந் தேத்தி. (க௨௦)

பொருமி யன்பின்மிக் கிருகணீர் பொழிந்துள முருகிப்
பிரிவி னைந்தொரு வகைபுற விடையருள் பெற்றுங்
கரிது போந்துகோ யிலின்புறத் தொருசிறை யடுத்தவ்
வரன தேவிபட் டணம்புக மதித்தவ ணிருந்தான். (க௨க)

வேறு.

ஈதிவ்வா றுக விதூற்குமு னிளவ லிரவிசே யனுமன்சாம் புவனே
யாதிய ராங்காங் கருட்குறி சிறுவி யருச்சனை புரிந்துவந் தடுத்தா
ரோதவற் றிலக்கு மணனருச் சித்த வோபருட் குறியமு தேச
சேதனசுயம்புலிங்கத்தின்றென் மேற்றிசையினற்குரோசத்திற்றிகழும். ()

நவிலுமக் குறிவாழ் நகரந்தம் பிக்கு நல்லவன் கோட்டையென் றமைத்[யோர்
தவிர்தரு மதன்கிட் டிசையின்முக் குரோசத் தமுத்தலிங் கேசதென் றிசை
திவள்குரோ சத்தி னெல்லையிற் றிகழுந் திருத்தகு சுககிரீ வன்செ
யுவமைத்ரிலிங்கமுவ்விடமு ருத்துப்பேட்டையென் றுரைப்பதின் றெளிரும்.

திருந்துபூ சனைசெய் சுக்கிரீ வன்றன் றிருமுனின் றருந்துதி செயுநகார்
பெருந்தகை யிலிங்கத் தொள்ளொளிப் பொலமும் பேரழ கமைதியு நேர்கண்
டருந்துணை யெந்தா யருட்டிரு மேனி யழகனே யென்றகா ரணப்பேர்
பொருந்திய வொளிகள் நகரிலோ தோங்கிப் பொலிதனேர்காணலாமின்றும்.

அத்திரு மேனி யழகனுக் கிசைந்த வழகியெம் மன்னையு மனைய
துத்திய நாயந் தான்வடி வழகி யென்றுல கிறைஞ்சிடத் துலங்கு
மத்திரு மேனி யழகனு மனையு மேத்துநர்க் கருணலங் களுமவ்
வுத்தம தலத்தின் சிறப்புமோ ரளப்பின் றுரைத்தவப் பெரும்பதிக்கழ்பால்.

வருமொரு குரோசத் தெல்லையிற் சாம்பு வன்றெழுந குறியிலங் கிடுமவ்
விருநகர் நாமஞ் சாம்புவ னுடை யெனப்பொலிந் திலங்குமிவ் வகைய
யொருவிலோ டொருவ ரும்புரி யிலிங்க முலைப்பல பலப்பல நகரின்
மருவிநின் றிலங்கு மேலினி ராமன் மதித்தவா புரிசெயல் வகுப்பாம். ()

இளவலோ டனுமன் சுக்கிரீ வன்மற் றேவரு மேவாத் தேவி
வளநகர்க் கேகி மந்திர நாதன் வழங்கருள் வழிகுரம் பியற்றிக்
கிளர்தரு மிலங்கை புக்கிரா வணன்முற் கெழுமுபன் னிருதரைப் பொருதக்
களனுற வீட்டி ராவணப் பிரம கத்திரா மேச்சுர மாகும். (கஉஎ)

மாதலத் திராம லிங்கதா பனத்தான் மாற்றுபு வீரகத் தியினை
வேதகா னனத்தைங் கரத்தொரு கோட்டு விமலபூ சனையினல் விலக்கிக்
காதயர் குடக்கா தவனிழ லாலைக் காவிறை பூசையாற் கடிந்து
கோதற வயோத்தி புக்கமு டிதசன் குளிர்திரு வருணனி குலாவ. (கஉஅ)

மலயமா தவன்றன் பதமலர் சிரமேன் மலர்வீற் றிருந்தரு ணெறியே
யுலகெலாம் புரந்து சிவார்ச்சனை யாதி யுத்தம நெறிவழு வாது
நிலவிய வியற்றி வாழ்ந்தன னவற்கு நிமிர்மந் திரவுப தேச
வலனளித் தமையாற் குதவ னேசன் மந்திரே சப்பெயர் வாய்ந்தான்.(கஉகூ)

அன்னமா வனமல் விராமன்சா னகியை யடுத்துமீட் பதற்குள வுபாய
மென்னென வுசாவி யெம்பிரா னருளா லெண்ணியாங் கெய்துதற் கிடனாய்
மன்னிய வதனாற் றிருவுசாத் தான வண்பெயர் பெற்றதால் மலரோன்
றன்னருந் தனய னென்றுவேத் திரக்கைச் சற்குரு நாதனே தினாவால்.()

வேறு.

என்றருணந்தி வாய்மை யிருஞ்சனற் குமரன் கேட்டாங்
கொன்றிய வுளத்த னாகி யுத்தம குரவ னேறே
நின்றனி முகாம்பு சாத நிறைசொற்றே னுகர்ந்து மேலு
நன்றறி லார்வங் கூர்வ நாடுமென் னெஞ்ச மன்னோ. (கூக)

இன்னுமிச் சூத கானத் திறைவனை யிறைஞ்சி யாவர்
துன்னுதம் மிட்ட சித்தி தோய்ந்தன ரந்தை யாற்றும்
பன்னருள் விளக்கம் யாவை பகர்ந்தருள் பெரும வென்றான்
மன்னருணந்தி நாதன் வாய்மலர்ந் தருளு மாதோ. (கூஉ)

அருந்தவ முனிவ கேண்முன் னனந்த தாண்ட வத்திற்
புரிந்தெழு மனத்தன் காதி புதல்வன்பொன் மன்றி னின்று
பெருந்திரு நடஞ்செ யீசன் பிரசமென் மலர்த்தாள் பேணித்
திருத்தருந் தவம்பல் காலஞ் செய்துவேட் டமர்ந்தா னன்றே. (கூங)

அன்னவன் றவக்கி ரங்கி யருட்டில்லை யம்ப லத்திற்
பொன்னடம் புரியெம் மான்முன் போந்தருள் கூர்ந்து காதி
தன்னரும் புதல்வ நீசெய் தவம்பெரி துவந்தும் வேட்ட
தென்னுரை யென்னத் தாழ்ந்திட் டிருகைகூம் புறநின் றோதும். ()

யாவரு முணர்த றற்கு மிறைவனே பேதை நாயேன்
றாவரு நின்ற னந்த தாண்டவ தெரிச னத்தின்
மேவிய மனந்து ரப்ப விழைந்தனை யடைந்து ளேன்யா
தேவநின் றிருவு ளத்தின் செயலென விறைஞ்சி னன்றால். (கூரு)

வருதிகோ சிகனே யிந்த வரம்பெறு சிதம்ப ரத்திற்
பெரிதுள முவந்து முன்னாட் பேணிரு முனிவர்க் கல்லாற்
புரிதரு நடமின் றாற்றென் புணரியந் தடத்து நல்லோர்
கருதுமோர் நறிய சூத கானன மிலகு மாங்கே. (கூசு)

நீவிழை நடனங் காட்டி நினக்கருள் புரிது மென்றே
யேவிய நயந்து போற்றி யெம்பிரான் விடைபெற் றேகி
மாவனம் புகுந்து கோசி கன்மனங் கரைந்து வாழ்த்தி
யோவறு தடம்புக் காடி யோதிய பூதி யாடி. (கூஎ)

கண்மணி புனைந்து பஞ்சாக் கரங்கருத் துறச்செ பித்து
வண்மணிக் கோயில் புக்கு மந்திரேச் சுரன்வான் போற்று
மொண்மணி கண்டன் முன்சென் றுளநெகிழ்ந் துருக வேத்தித்
தண்மணிக் கழலி றைஞ்சித் தாண்டவம் விழைந்தி ருந்தான். (௧௩௮)

முன்னருள் புரிந்தாங் கன்ன முனிவர்க்கு நடன நாதன்
றன்னருட் பெருக்கி னாலத் தாண்டவந் தரிசிப் பித்தான்
பன்னரும் பரமா னந்தப் பரவையுட் படிந்து பல்வே
றின்னருட் டுதிகள் கூறி யடிக்கடி யிறைஞ்சி வாழ்ந்தான். (௧௩௯)

இறையவ யார்க்குங் கிட்டா விப்பெரு நடன நாயேன்
குறைதப வளித்தா யெந்தாய் கோதிலா வருட்பெ ருக்கி
னிறையெவர் சொல்ல வல்லார் நீசன்செய் கைமா றுண்டோ
மறையெலா மளப்பி லாத வள்ளலே யென்று தாழ்ந்தான். (௧௪௰)

அளவிலா னந்த மிக்கூர்ந் தனையனு டோறு மன்ன
பளகிலா போது சூத பாதவ கானத் தாலந்
களனிலா வண்ணல் பாதங் கைதொழு தமர்ந்தான் பன்னாள்
வளனுலாம் புன்னை வேலி மறைவனத் தடைந்தான் பின்னாள். (௧௪௧)

கோசிக னடங்கண் டன்பு கொண்டுவாழ் காதை யீதான்
மாசறு தவத்தோய் பானு மதிமுத லொன்பான் கோள்கள்
பேசுமிவ் வனத்தோர் காலெம் பிரானடி பணிந்து போற்றித்
தேசுறு தவஞ்செய் திட்ட சித்திபெற் றருளின் வாழ்ந்தார். (௧௪௨)

உத்தம முனிவ வேறொன் றுரைத்துநீ யுற்றுக் கேண்மோ
முத்தொழின் மத்தி வாய்ந்த முத்தொழிற் றிதிசெய் தேவன்
றத்துவ மார்க்கம் யார்க்குஞ் சாற்றுமா குரவன் வாய்மை
யுய்த்துணர் மறைநான் காதி யுள்ளவா றுணர்ந்த மேலோன். (௧௪௩)

இப்பெருந் தலைவ னுயு மிந்திரை கேள்வ னாழி
னப்பெரு வலிக டத்தற் கருமையா லாதி நாளிற்
றுப்புறு மசுரற் காற்றாச் சுரர்கட லமுதுண் டாற்றல்
கைப்பெறு மாபா லாழி கடைந்திடத் தொடங்குங் காலே. (௧௪௪)

விக்கின நீக்க லாக்கல் விளைத்திடும் பெரிய தேவை
யக்கணம் பூசித் தேத்த வயர்த்தமு துணவின் வாஞ்சை
மிக்கெழு வமரர் சூழ வேண்டும்பல் கருவி கூட்டித்
தக்கபா லாழி மாலோன் றான்கடைந் தியல வாங்கே. (௧௪௫)

இந்திரை யிந்தி ராணி யிலங்குவெள் ளிபமுன் னாவ
வந்துவந் தெழலு மீது மற்றெமக் கெமக்கென் றோதி
முந்துமுந் தொவ்வொன் றாக முற்றும்பெற் றுளங்க ளித்தார்
சிந்தனை விழைந்த வாறத் தெள்ளமு தெழக்காண் கில்லார். (கசசு)

மெய்விசைத் தீர்த்து வானோர் விசைதூக் கடைந்தா ரற்றாற்
பைவிரி யரவாற் றாதப் பரவையும் வறப்பத் தன்வாய்
மைவிரி யாலங் கால மற்றெமக் கெயகமெகன மேர்முன
கைவிரித் தாதறி யஞ்சிக் கால்விசை கால்வி சைத்தே. (கசஎ)

முழுவிசை யிதுவே யென்ன முற்பெருங் கோடி னாப்
பொழுதிறை பாணித் தாமரை ஞணித்தான் பொருக்கென் றோடா
வழுவினவ் வால மீற்றின் வன்னியிற் சுடவெண் மேனி
பழுதுறீஇக் கரிய னாகிப் படர்கதி வலியி னுய்ந்தான். (கசஅ)

வருவிடந் துரப்ப வென்ற மாயன்முன் வானோ ரச்ச
மொருவிடா தோடி யோடி யுலகெலா முழன்று மந்தோ
வெருவிட மன்றி யாண்டும் வேற்றிட மின்றி நைந்து
பொருவிடை யமலன் முக்கட் புராரிபே ரருள்கை கூட. (கசகூ)

அடுத்தவ ரிடுக்கண் டீர்க்கு மமுதசஞ் சீவி யாயிப்
படிக்கணே யமருஞ் சூத பாதவ கானத் தெய்தி
நடுக்கமுற் றொழிந்து கீழைக் கோபுர வாயி னண்ணிப்
பொடிக்கொள்பொன் மேனி யெம்மான் கோயிலுட் புகப்போ யி ா ா

அண்ணலெம் மந்தி மே னடியின்கீ ழுலறி வீழ்ந்தா
ருண்ணெகிழ்ந் துருகு மாயோ னேதுமீ தும்பர் கோவே
நுண்ணென விரிந்த நஞ்ச துரப்பநொந் தலைந்தா கூழிற்
றண்ணரு ளீர்ப்பப் போந்துன் சந்நிதி யடைந்தே மெந்தாய. (க ரு)

ஒருகணந் தாழ்க்கி னெம்மை யுடனுடன் றுலகத் தஞ்சம்
வருகணை மீற்றி லாடு மயானபித் தான மாகிப்
பெருகண வுசாத்தா னப்போ பிரியுமால் விரயு நஞ்ச
மருகண வுறாம லெம்மை யளித்தியா லருளின் வள்ளால். (கருஉ)

வேறு.

என்று மாதவ னிணையடி மாதவ னிறைஞ்சி
நின்று வேண்டலு நின்மல னாருணி லையா ற
றென்றி சாமுக வாயிலின் வழிவெளிச் சென்று
பொன்று றுத்திறல் வைரவச் செம்மன்மேற் றிசைப்போய. (கருங)

ஐங்கு ரோசத்தி னெல்லையி னவ்விட மமரா
ரெங்கு ளாரென வினவலிற் கொதித்திரைத் தெழலுஞ்
செங்கை நீட்டிபு கவர்ந்தனன் றிருவுசாத் தானத்
தங்க ணுதனு யிடைப்புக வருட்கரத் தளித்தான். (கஙச)

அனைய வவ்விட மங்கையி னங்கயின் றகில
நினைய நீலகண் டேசுரா மங்கொடந் திலையிற்
புனைய ருட்டிருக் கோயில்கொண் டருளியப் புராரி
யெனையு மாள்பரன் வீற்றிருந் தருளுவா னென்றும். (கஙரு)

இந்த மாதலத் தவ்விட மெந்தைகை யளித்த
மைந்த னும்வடு கேசனென் றன் மாதிர முகனு
மெந்த நாளுமத் தளியில்வீற் றிருந்தருள் புரியு
மந்த நற்றலத் துற்றருள் பெற்றுளா ரனேகர். (கஙசு)

இன்ன நற்றலந் தாயரங் கோட்டையென் றிசைப்ப
வின்ன தியாவையுந் தருமய னகரின்றிக் கிலங்கு
மன்று சக்கண்ட நாதனுங் கருள்செயல் வாம
மன்னு தாயறம் வளர்த்தநா யகிபெயர் வயக்கும். (கஙஎ)

அறம்வ ளர்ப்பது நாமிரு நாழிநெல் லாலெத்
திறனி வர்க்கொடய செயல்விரிக் குதுமெனத் தெளிந்தம்
முறைய ளிழ்தநெல் லாலுல கூட்டுபூ தகுசீர்
சிறைவ ளத்தமே வளாளர்கூட் டம்மவ ணிலாவும். (கஙஅ)

என்னை யாளறம் வளர்த்தவ ளெண்ணிய செயலை
முன்னி யாங்குமுற் றினாரிவர் முதத்தினெம் மணித்தாய்
மன்னி வாழ்கெனத் திருவுளங் கொண்டமாண் பாலோ
வன்னர் கூட்டமிக் கவிருமந் நகருமப் பாங்கும். (கஙகூ)

விடம யின்றரு ளண்ணறன் சூதமா விபினத்
திடைமி டைநதமான் முதலினோர்க் கருள்புரிந் தினிநீர்
கடல்க டைந்திடிற் கணேசனைப் பூசித்தே கடைமி
னிடமொ ழிந்திடுஞ் சென்மினென் றிசைத்தன னெம்மான் (கசo)

அன்ன வாறரு டலைக்கொடு மான்முத லமரர்
நன்ன ரேகின ரயன்றிருக் குமரமே னலங்கேண்
முன்ன ரோர்பகற் கௌதமன் மனுவிறை முளரி
யன்ன சேவடி பணிந்தக லிகைதனை யடைந்தான். (கசக)

குருகு லத்தினில் வருதிற லொருகுலக் கோமா
னுருகு மன்பினிம் மந்திரேச் சுரனடி யுன்னிப்
பெருகு பூசனைப் பேற்றின்வா னுருப்பசி பிரியா
தருகு வாழ்மனை யாப்பெறீஇ யின்பமுற் றமர்ந்தான். (கசுஉ)

சசிமு கத்துவான் சசிமுனு ணகுடன்றற் சார
நசைமி குத்தமை யுணர்ந்தொரீஇ வெரீஇயிவ னண்ணிப்
பசைமி குத்துள மந்திரேச் சுரனடி பணிந்தே
வசைமி குத்தவந் நகுடற்கு விபத்தினை வழங்கி. (கசுங)

அண்ணல் மந்திரேச் சுரனருள் பெற்றினி தடைந்து
விண்ணி னாகண்ட லன்றனை வேட்டெதி ருவப்ப
புண்ணி லாவமின் புறப்பொலிந் தடன்றழீஇ யமர்ந்தா
னெண்ணி யிந்திரன் மந்திரேச் சுரனடி யிறைஞ்சி. (கசுச)

அருள்பெற் றுங்கெதிர் விருத்திரற் றடிந்தினி தயர்ந்தான்
மறருள்செ யாயுள்வே தியர்களச் சுவினிதே விருவர்
மருவி மந்திரேச சுரனடி வழுத்திவா னவரோ
டொருவு றுதலிப் பாகமோ பெற்றினி துவந்தார். (கசுரு)

வேறு.

இப்படி யளப்பி லாதா ரிணையடி சூத கானத்
தப்படி முடியாற் போற்றி யடிக்கடி மலர்வாழ் வுற்று
ரெப்படி யுரைப்ப தெம்மா லிருட்கடி மனத்தோ யென்றான்
றப்படி வேணி நந்தி தொழுகழ பாவிக கேட்டான். (கசுசு)

ஆயசீர்ச் சனற்கு மாரனு ரிர வனத்தெம் பெம்மான்
றூயமான் மியத்தின் மேன்மேற் றொடர்ந்தெழு மார்வந் தாண்ட
மாயன்முன் மந்தி ரேசன் வாரிமா முகற்பூ சித்தே
நீயரி கடைசென் றேய ஈறையருள் பெற்றா னன்றே. (கசுஎ)

பின்னரும் முராரி செய்த பெற்றியெ லூற்ற தென்கொ
லென்னது மருடி யாமேலா வண்ணலென் றடியிற் றாழ்ந்தான்
மன்னரு ணந்தி யெந்தை மற்றவற் கவைவி ரித்துச்
சொன்னவா கேண்டி னென்றுசூ தன்மா தவர்கட் கோதும். (கசுஅ)

வேறு.

அளியி னீடிய ராகவ னனுர்முன் வீடியவாழ்வுற வருள்செய் காதையை
யாதிய, வொலிரி மான்மிய மோதின ருடன்வி றையினர் நீள்பகை யொரு
வொணுவிட மாதிய, பளகெலாமெலி தோடிய படியில் சீரெழி லார்மனை
பலம கார்முத லாதிக, வளனு லாவயல் போகமு மருவி யேசிவ ஞானமெய்
வழிசெல் வாரொரு வீடரோ. (கசுகு)

இராமன் மந்திரோபதேசம்பெற்ற சருக்க முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-கஙகுக.

# அமுத நிவேதனச் சருக்கம்.

தசரதன் மைந்த னுணமீளி தளர்வொழி புய்ந்து நீடுவாழ்வி
னிசைதரு மந்தி ரோபதேச மினிதுறு நன்றி யோதினுமுன்
னசையமு தங்கொ ணும்பரரி நகமகள் கொண்க னார்முனிவு
நிசசரி தஞ்சொல் வாமெனவு ணிகழ்தர நந்தி நாதனோதும். (க)

வேறு.

சூதவன நாத னமர் தாசசரிதத் திடைமேன்மேற்
காதல்வளர் சனற்குமர கரிசறுமா தவகேண்முன்
மாதவனெம் பிரானளித்த மலியருடன் றலைமிசைவைத்
தாதரமிக் குறுதியினி யமுதுபதி யெனச்சூழும். (உ)

சுரரசுரர் குழாந்தொடர்த தும்பிமுக நம்பியிரு
வரகமல மலரடிகண் மறவாம லுறவாழ்த்திப்
பரவுபொருள் பலகொடுசெ பரிவையவிதி வழியாற்றிச்
கரமலரஞ் சலிமுடிமேற் கவினுறச்சொன் றனன்றுதிப்பான். (ங)

பிரணவமாந் தனிக்கூடம் பெயராத குஞ்சரமே
பிரணவமா மாளானம் பிரியாத புகர்முகமே
பிரணவமா மலர்வாவிப் பெரிதாடும் போதகமே
பிரணவமாஞ் சேவகத்திற் பிறங்குமணி வாரணமே. (ச)

ஓங்கார வோங்கலகத் துதித்துலவுங் கிரிசரமே
யோங்காரத் தீங்குடிலை யுள்ளவிருந் திசரமே
யோங்காரத் தேங்கான மொருவாத வனசரமே
யோங்காரப் பெருவீதி யுலாவருநந் தாவளமே. (ரு)

தாரகமே முகமாகத் தயங்குபெரு மதங்கயமே
தாரகமே திருவுருவாத் தனிவிளங்கு மாதிரமே
தாரகமாம் பிடிகளிற்றிற் றனிமெய்யூந்த கயமுனியே
தாரகத்தி னுள்ளுறையி ராயதனை வரிய குணகரியே. (சு)

திருவருளா மதவெள்ளந் துமரகொழிக்குங் கரவரையே
கிரியையறி விசையெனுங் கிளர்மதமூன் றொழுக்கிபமே
யிரவுபக லற்றொளிரு மிடத்தமருங் கடக்களிறே
வரவொடுபோக் கிலாதசெங்கு மருவிசிலை மதாவளமே. (எ)

பரவுமலப் பெருஞ்சேற்றைப் படர்ந்துழக்குங் கறையடியே
விரவுபவப் பெருங்காட்டை விரைந்தழிக்கும் புழைக்கரமே
வரவயிரா வணமுகைத்து வருங்களப நால்வாயே
யரவுதர பந்தனமா யார்த்தபெருஞ் சீர்த்தகரே. (௮)

ஜநகரநால் வாய்முக்க ணருளிருதா ளொருமுனியே
சங்கரனீள் சடைக்காட்டிற் றனிவிளையாட் டியல்கயமே
கஙகையுத கப்புழைக்கைக் கவர்ந்திறைக்குங் கயந்தலையே
செங்கரமேற் கோளரியோ டேனுதித்த சிந்துரமே. (௯)

மறைமுடிப்பா தலைகயினடி மலர்சாத்துந் தாமரையடியே
மறையனைநா புமாக வலையணியா மேலமுமே
மறைபுகன்மு லப்பொருளா வமுதத்தியன்மா தநககமே
மறையுமனு குதற்கருஞ்சா லனர்களப மேரமே. (௰)

கணபாச குணபாச கலிபாச புலிவாச
பணபாச சடிலமகி பதிராச சிதிராச
வணபாச மலர்தழி வளைபாச வளைவலைவை
மணபாச துணர்வாச மலரடிக ளிணை போற்றி. (௧௧)

அகிலமெமை முபக்கிரமத் தன்பினினை யேயிறைஞ்சத்
தகவுறுமச் செயன்முழுதுந் தனிமுடிப்பாய் வனிமுடிப்பாய்
திகழுறயாந் தொடங்குமரிச் செயன்முடிப்பாய் பயமொழித்தெம்
பகவதிரு வருள்பொழிபூம் பதந்துணையே துணையென்றே. (௧௨)

இன்னவைபற் றுதிபுகன்றக் விறையருளா னிறையுலகை
துன்னியசென் றம்முதந்தன் சூதவன நாதனடி
சென்னியுறா ரவாத சிந்தையுறைப் பாழி
முன்னிலையிற் சுராசுரரான் போதமுறக் கடை விதந்தான். (௧௩)

அருகெழுந்த தின்னியசுவை யாருமுத மூதுகடத்தின்
பாங்குறப்பு ரிதம்புரிந்து பாஙகுறவைத் தனன்பின்னர்த்
தேங்குசுரா சுரரனைய திருமார்ப னடிதாழ்ந்தில்
வோங்கமுத முறைபகிர்ந்திங் குதவுகென வேண்டினரால். (௧௪)

அதுவினவு மரியவரை யழைத்தசுர சுரகுலங்கா
விதுமுடியாம் பிரவனத்தெம் விமலனரு ளாலித்த
முதசுவையா ரமுதமக்கு முற்றுறப்பெற் றனயவனுக்
கிதுபனிசிவ சனம்புரிதல் விருப்பிரா தநகொளவே. (௧௫)

மரபாகும் பொறுத்திருமின் வல்லையமு தளிப்பனென
வுரையாடி யமுதகட மொருங்குடன்கைக் கொண்டேகி
விரையார்தண் சூதவனம் விரையாவந் தனையசுவைச்
சுரையார்பொற் றசும்பொருபாற் றுரிசறவைத் தமுதேசன். (கசு)

கழன்மறவா மனத்தொடுமோர்க் கண்டதோ யந்தோய்ந்து
நிழன்மலையாக் கண்டிகைவெண் ணீறணிந்தைந் தெழுத்தோதிப்
பழமறைபோற் றருமமுத பரமசுயம் பிலிங்கேசற்
றெழுன்முறையா னயந்தேத்தித் தூநறுமா மலராதி. (கஎ)

அருச்சனைக்காம் பொருள்பலவு மமைத்தடிபூ சித்தனைய
மருச்சுவைத்தண் ணமுதகட மலிதரநேர் வைத்தண்ணல்
கருச்சுழியி லுறுதருட்செங் கைந்நீட்டி யெமையெடுக்குந்
திருச்சுடரோ யமுதேசா சிறியோன் றிருவருளால். (கஅ)

ஆழிகடைந் தெடுத்ததிரு வமுதினுஞ் சமுதாக்கொள்
வாழிதிருக் குமுதமலர் மதுவாக்கொண் டருளியெம
பாழிவினை யொழித்தினருள் பாலியெனப் பன்முறைதாழ்ந்
தேழிசையா மறையானந் தெடுத்தேத்தி யெதிரிறைஞ்சி. (ககூ)

பூசனைமுற் றுறமுடித்தப் புனிதர்க்கே தனவமுத
நேசனையாச் சண்டேசர்க் குளபாக நிவேதனஞ்செய்
தீசனைநல் வாசனையா ரிதழிமதி நதிவேணித்
தேசனைமீட் டும்பரவிச் சென்றனனவ் வமுதினொடும். (உ0)

அன்னதிரு வமுதநுகர்ந் தசனேவோ வதுமேனித்
துன்னியோ முற்கலுழன் றனையமுதத் துளியானோ
மன்னமிர்தந் தருதானவ் வடிவினுணர்த் திடவதுவாய்
முன்னரோ முளைத்தெழுந்த முறையேயோ நாமறியோம். (உக)

அத்தகைய மாவனத்தவ் வருளிலிங்க மமுதமய
சுத்தவடி வாகவே துலங்கியொளிர் தருமென்றும்
வித்தகர்கே ளவ்வமுத மிளிர்கடங்கொண் டேகியமால்
கொத்தசுர ருணிலமரர் குலக்கிடரா மெனக்குறித்தே. (உஉ)

அவ்வசுரர் தமைவஞ்சித் தமரருக்கே யமுதமளித்
தொவ்வரும்பாற் கடலடைந்தாங் குரகபதிக் கொளிர்சூத
திவ்வியகான் விடந்துரத்தச் சென்றதுமந் திரநாதன்
றெவ்விடமுண் டுயிரளித்த திருவருளு மதன்மேலும். (உங)

எண்ணியவா றமுதுகொளற் கிடர்புகுதா வுபாயமினி
நண்ணிலவ வுரைத்தருளி யுதுகிடைப்பித் தருளியாதுந்
தண்ணியவின் னமுதகிவே தனங்கொண்டு பிரசாத
மண்ணலரு டாப்பெற்றாங் கமாருண வளித்ததுவும். (உ௪)

ஆதியவச் சூதவனத் தமுதேச னருளனைத்து
மோதியமர்ந் தனன்கேட்ட வரகேச னேதியுளத்
தாதயரிக் குறைத்திட்டின் றமுதேச தெரிசனமெய்
போதுகிடைத் திடுமினுமென் றப்பாமன் பதப்போதே. (உ௫)

மனத்திருத்தி வேண்டியவா மமுதன்பர்க் கருடொழிலோய்
கனத்திருத்தி வைத்தமணி கண்டவெனக் கஞ்சலெனீ
யெனத்திருத்தி யுறவருளி யெளியேனைக் குளிர்சூத
வனத்திருத்தி நின்காட்சி வழங்கியநான் பெறுவேனே. (உ௬)

என்றுரைத்தங் கன்புநனி யெழுந்துசெல வினிதிருந்தா
னென்றுரைத்த நந்திகழ லிறைஞ்சியவம் முனிக்கதன்மே
னன்றுரைத்த வாறுமக்கு நாமுரைத்தல் கேண்மினென
நன்றுரைதத வச்சூத நற்றவர்சோ னயந்துரைக்கும். (௨௭)

வேறு.

முகுந்த னமுதமுசி வேதனு மமுதங்கொள் சரிதமிதோதினே
ருகந்து நினவிய சீரினோ ருளங்கொள் செயல்கள்கை கூடுவார்
மிகுந்து வளரிக வாழ்வெலாம் விழைந்த படிநுகர் வார்பினீள்
சுகந்த மலரடி நீழல்வாழ் துலங்கு சிவகதி சேர்வரே. (உஅ)

அமுதநிவேதனச்சருக்க முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்—௬௩அ௪.

---

# இந்திரன் றிருவிழாச் சருக்கம்.

சந்திர சேகர னாமு தங்கொள மாலருள் சீரிது
மந்திர நாதனு லாவரு மங்கல நீடுவி ழாமுறை
யிந்திர னேதக வேபுரி யின்பினி யோதுது நாமென
நந்திரள் பாதக மோசக நந்திபி ரானவில் வானரோ. (க)

வேறு.

மைந்தகே ளனந்த னாங்கு வந்தமு தேசற் கந்நாண்
மைந்தம் ரிராச சூடா மணியெனும் வளவற் கூய
மைந்தபல் வளந்து வனற மரபினி லுவகை மல்கி
* மைந்தறப் புரிம கோற்ச வத்திரு மாண்பு முற்றும். (உ)

வானநா டளிக்குஞ் சீர்த்தி மகபதி யுணர்ந்து சூத
கானநா டளிக்கு னத்திற் கனிந்தமு தேசன்காள
பானனு டளிக்குட் போர்ந்து பரவியத் திருவி ழாச்சீர்
மேனனு டளிக்கு லாவ விழுத்தக விதியாற் செய்தான். (ங)

அனந்தன்முன் னியற்று வித்தாங் கனந்தரம் வலாரி யாற்றம்
வனந்தரு மனைய வாய்மை மகோற்சவத் திறஞ்சொல் வாமென்
றினந்தரு முனிவர் வானோ ரேனையர் தமையொ துக்குங்
கனந்தரு வேத்தி ரக்கைக் கண்ணுதல் கழறு கிற்கும். (ச)

வினவுதி சனற்கு மார வித்தக முனிவ ரேறே
மனகனும் பனக வேந்த னாற்றுமக திருவி ழாச்சீர்
தனகமோர்ந் தெழுசு நாசி தண்ணரு ளமுத நாதன்
கனகவம் போரு கப்பூங் கழற்பதி கருத்த னாகி. (ரு)

தழைத்தெழு மன்பு முன்போ தரச்சதா கதியைத் தன்முன்
னழைத்தனி லேச கேட்டி யாம்பிர காணத் தெம்முட்
குழைத்தரு ளுருவாய் மன்னுங் குலவமு தேசற் கிந்நாண்
மழைத்தரு சைத்தி ரோற்ச வம்புரி வாஞ்சை யுற்றாம். (சு)

அந்தலி னமுத சூத வணிவனம் விரையச் சென்று
சாதலி னாங்கு முன்னர்ச் சலினிறை செயல்க ளெல்லா
மோதலி னதிச யென்ன வுளுற்றதென் றனன்கேட் டாங்குப்
போதலி னோர்வ ரிக்குப் பொருக்கென வெழுந்தான் மன்னே. (எ)

ஆசுக மளிப்ப திந்த வருட்சிவ பணியே யன்றோ
வாசுக† மளித்து மாற்று மமுதலிங் கேச னம்பா
லாசுக வளிப்பா னாக வருட்டொடர் பிணித்தான் போன்மென்
றாசுக வேந்தன் மீதூர் பார்வமுந் துறச்செல் கின்றான். (அ)

* மைந்து - மயக்கம்.

† உகம் - உலகம்.

செல்வழி மயற்கூ யீறு செப்பும்வான் றபதி கேட்டி
மல்வரு சைத்தி ரோற்ச வந்தனிச் சூத கானத்
தெல்வள ரமுத நாதற் கியற்றிய விழைந்து மாங்கட்
பல்வகை யணிகண் முன்போய்ப் பயிற்றுதி வல்லை யென்று. (கூ)

இந்திர ஞானை யாமீ தென்பது மிசைத்தான் கேட்ட
தந்திர வழிசார் பெல்லாந் தணவறத் தெளிவான் றச்சன்
மந்திர நாதன் சூத வனத்துட னனுச ரோடும்
வந்திர வகற்றுந் தாய மார்க்கண்ட தோயந் தோய்ந்து. (கO)

தரிபுகுந் தமுத நாதன் சந்நிதி சார்ந்தி றைஞ்சி
யரிதிகுந் துந்தத் தான்முன் றுற்றமக் கோயிலெல்லாங்
கரிதிகுந் தெழில்வி ளைக்குங் கான்மு ளை தன்னைக் கண்டாங்
கொளிபுகுந் திழுக்கக் கண்ணுற் றுரைப்பரு முவகை கூர்ந்தான். (கக)

இயலெழி லுலக மெல்லா மிலங்கிறு மிளஞ்சேய்க் கினேரோர்
செயலெழில் புணர்ப்பர் காதற் றிறத்தினை செய்தி போல
வயலெழில் வேண்டா தென்று மவிருமத திருக்கோ யிற்கு
வியலெழில் வகைக ளெல்லாம் விழுத்தக விழைந்து செய்வான் (க?)

நவின்முதற் கோபு ரம்முன் னந்திமண் டபத்து நீசி
டவிர்திசை யிடைவ சந்த மண்டபத் தகத்தி டைக்க
ணுவமனெவ் வுலகத் துள்ளு முள்ளதன் றிதற்கென் றேதத்
திவியமா மணிப்பொன் வேதி சிறப்புறா றிகழக் கண்டான். (கங)

சிலையொளி வயிரத் தம்ப சிரையதி னிறுவி மேனின்
றிலைகொளித் துகிர்க்கு டஞ்சா ரிந்திர நீலப் போதி
குலவொளித் தரள விட்டங் கோதில்செம் மணிவி டங்கங்
கலவொளி சலமேன் மூன்று கவினவோர் விமானங் கண்டான். (கச)

தூமணித் தூபி யச்சித் தொழுமணி * சிரைத்தா னந்தத்
தேமணி விமானக் கேற்கு நிறமணி யுறுப்பெ லாமுங்
கோமணி சிரையின் யாத்தக் குலமணி கிரிசை யோடு
மாமணி கண்டன் மேயம் வனமணி படங் கண்டான். (கரு)

அத்தகு வேதி கைக்காங் காயபொன் மணிச்சோ பானம்
வைத்தது சூழத் தாநீர் வந்துபோம் வழிய மைத்துச்
சுத்தநீ ரரங்கி யாத்துத் தூநறு மலர்ப ரப்பிச்
சித்திர சிரைக ளெல்லாந் திறத்திற னுகக் கண்டான். (கசு)

* மணி - இடைக்குறை.

பிறங்குகண் ணடியோ வென்னப் பித்திகை யாதி யேனைத்
திறங்குல வுணிக ளெல்லாந் திருத்தக வமைத்துள் ளாலம்
மறங்குசெவ் வியவ சந்த மண்டபப் புறம்பு சூழக்
கறங்குசீ ரிளம ரக்காக் கமழ்ந்துல களப்பக் கண்டான். (கஎ)

திருத்தகு மபிமு கச்சீர்த் தெருதுவா யிலினே ரெம்மா
னுருத்தக வெழுந்து பத்தி யுலாநடைக் காவ ணந்தான்
குருத்தகு விதான மாதி குலமணித் தொங்க லாதி
மருத்தகு மாலை யாதி மலிந்தொளி வயங்கக் கண்டான். (கஅ)

மரகதத் திலைக டண்டு மணிபொருக் குலைய மைத்து
விரவுபூத் துகிரிற் றாக்கும் விழுமிய வாழை வெண்பொ
னரைதுவர்ப் பழுக்காய் முத்தி னலர்முகை யாதிப் பூக
நிரைகள்பல் வகைய கன்ன னிரைநிரை யாகக் கண்டான். (க௯)

நிலனெலாம் பளிங்கிற் சோதி நிலவெழச் சமன்செய் தன்ன
தலனெலா மதித ழூஉம்பஃ றாரகா கணங்க ளென்ன
நலனெலா நிறைந்த தூய நறுமணி நிரைக ளாய
குலனெலாம் விளக்க மாகிக் கொழுஞ்சுடர் பரப்பக் கண்டான். (௨௦)

விரையெலாம் விராய சாந்த மெழுக்கெலா முகனுஞ் செய்தான்
விரையெலாம் விராய பன்னீர் மேலெலா மணப்பப் பெய்தான்
விரையெலாம் விராய தூபம் விசும்பெலாங் கமழச் செய்தான்
விரையெலாம் விராய சுண்ண விதமெலாம் விரியப் பெய்தான். (௨க)

இடந்தொறுந் தோறுஞ் செம்பொ னெழின்மணி குயின்று தூய
வடிபுன னிறைத்துச் சென்னி மாவிலை மணிப்பொற் றேங்காய
முடிதரு கருப்பை வாச மொய்ம்மலர் மாலை சேர்த்தி
நெடிதொளிர் பூரகும்ப நிரைநிரை யாக வைத்தான். (௨௨)

இன்னன மேலு மேலு மெண்ணிலை வெண்ணி யெண்ணி
மன்னிய புரிஇவ சந்த மண்டப முதற்கோ டித்தாங்
கென்னையாண் மந்தி ரேச னிமாசலை யாளப் பீன்ற
வன்னைவாழ் நிகேத னங்கட் களவிலா வணிகள் செய்தான். (௨௩)

தினமரு தமர்ந்து போற்றுந் திருத்தொண்டி னிலையர் தாமு
மினமரு தியாமுன் றொண்டாற் றிருநதளி யிதுவன் றென்று
மனமரு தையுற் றெந்தை வடிவினுற் றெறிவ னென்று
லனமரு விழைவி னுற்று பணிசிலை யமைக்கற் பாற்றே. (௨௪)

உலகெலாந் தழைக்க வெம்மா னுலாவரத் தவஞ்செய் வீதி
*லனெலாந் தருப்ப ணத்தி னிழுலெழுத் தூய்மை செய்தத்
தலனெலாம் வெண்ம ணற்றாந் தன்மையிற் றாள நுண்மைக்
குலனெலாம் பரப்பி வேணிக் குடிஞையென் றுவப்பச்செய்தான். (உ௫)

அம்மறு கிருபாற் கன்ன லரம்பைபூ கதவொ ழுக்க
மம்மறு கனைய கங்கை யாற்றிரு கரைசி லோயுஞ்
செயமலர்க் கதலி யர்திச் செறிவென நறுவி மீது
செம்மணித் தொடைய லாதி திகழ்மக ரிகைகள் சேர்த்தான். (உ௬)

இவ்வகை யேனை யாவு மெழில்வகை நிரம்ப முற்றி
யவ்வகை மயன்மு றச் சென்றாங் கனிலனுக் குணர்த்த வன்றோ
னுய்வகை முன்ன ரேய வும்பர்கோற் குணர்த்த வொல்லைச்
செய்வகை யமரர் சூழத் தேவர்கோ னுங்குப் போந்தான். (உ௭)

ஆரரு ளீர்ப்ப முன்னின் றன்புபின் றள்ள வுள்ளம்
போரரு ளுலகெ லாஞ்செய் பெரியநா யகிபான் மேய
சீரரு ளமுத நாதன் சேவடி தாழ்ந்து பல்கா
னோரருள் வெள்ள மூழ்கி நின்றுபஃ றுதிந வின்றான். (உ௮)

காளகந் தரமே கேச கனககந் *தரமா னேச
†காளகந் தரர்க்கு மோச கவினகந் தரமா ஞேச
‡காள¶கந் தாசு தேச கனநதகந் தரச பேச
||காளகந் தரச சூத கானகந் தரர் வாச. (உ௯)

வநசனை கண்ண னுன்று மாறு றெழிசெய் வாகுத
வநசனை யினுரி ரசந பலியமுன் பொலிய வாநகு
வநசனைத் தின்பருர் றும் வெநசரு தேச வாளரி
வநசனைத் துலைதும் போற்று மாவனைத் தரசே போற்றி. (௩௦)

*நாகவா சனனே வாத நகுமணிக் குடிகை யுசி
நாகவா சன பூசை நயாநதவ தருமே காச
நாகவா சன காதி நற்றவ குரவ வாசை
நாகவா சனம் போற்று நறியமா வனத்தாய்போற்றி. (௩௧)

---

* தரம் - மலை. † காளகம் - கரியபாவம். ‡ காளம் - மேகம். ¶ கம் - சிரசு. || காளம் - சூலம்.

* நா - கவர் எனப்பிரிக்க.

தருமமால் விடையாய் போற்றி சைலையோர் புடையாய் போற்றி
யிருண்மனத் தடையாய் போற்றி யிதழியந் தொடையாய் போற்றி
சருமமூற் றிடையாய் போற்றி சதுர்மறை நடையாய் போற்றி
வருமயிற் படையாய்போற்றி மாவன முடையாய் போற்றி. (௯௨)

அரிவளர் மனத்தாய் போற்றி யடையலர்ச் சினத்தாய் போற்றி
களிவள ரினத்தாய் போற்றி காளபோ சனத்தாய் போற்றி
தளிவளர் கனத்தாய் போற்றி தாயசோ பனத்தாய் போற்றி
நளிவளர் தனத்தாய் போற்றி நவிலுமா வனத்தாய் போற்றி. (௯௩)

வேறு.

என்றிவ் வாதி துதிக ளியம்பிநேர்
நின்று செங்கர நீண்முடி மேனெழீஇச்
சென்று கூம்புறச் சிந்தை மலர்ந்துதா
னொன்று மன்பி னுவந்திது வேண்டுமால். (௯௪)

ஐய வாரமு தேச வசலைபான்
மெய்ய மந்திர நாத விதுநதிச்
செய்ய வேணிய சின்னஞ் சிறியனே
னுய்ய வேண்டிநின் சந்நிதி யுற்றனன். (௯௫)

உற்று ளேனின் சைத்திர வுற்சவ
முற்று நான்முறை தொட்டு முடித்திட
வெற்றி வாழ்விருப் பெய்தின னேழையேன்
*பெற்று கந்தநின் பேருள் வேண்டுமால். (௯௬)

நன்மை தொன்றுறத் தெண்ணி னடுவிடர்
பன்பு குந்திடும் பண்பினர்க் குய்மெனி
னன்மை தொன்றுமி றுயினேற் கன்னவை
பன்முற் றெய்தல் பகர்தலும் வேண்டுமோ. (௯௭)

செய்த லோத லியாதுந் தெரிதராப்
பைதல் வாழ்க்கையுட் பட்டுழ லேழைபா
லுய்த லில்லை யாதமொ ராயிர
மைந்த வெய்துற நண்ணினு மண்ணலே. (௯௮)

திருவு ளம்பொறுத் தாள்கெனத் தேவர்கோன்
மருவு ளம்புயத் தாளின் வணங்கிமேல்
வெருவு ளங்தெறு நந்திமுன் வேண்டுபு
தருவு ளம்புரி யாணை தலைக்கொளா. (௯௯)

---

* பெற்று - கடைக்குறை.

தன்ன தேவர் குழாத்தினைத் தானழைஇத்
தன்ன மும்மனம் வேறொன்றிற் சார்ந்திடா
தின்ன வற்சவத் தின்புற நீர்விழைந
தின்ன ரின்ன வியற்றுகென் றேவினான். (௪௦)

ஆசை யாசையிற் போற்று மமரரை
நேச மிக்க விமல நமரங்கா
ளேசி லாத விழாவிந கியற்றுதல்
பேசி னுந்தனைப் பேறுகொண் டேயுறு. (௪௧)

முகம னோதி யவருண் மகிழ்ந்தித்
தகவற் கோதுவன் றக்கினை யாதிய
தொகுபொன் னுடைமாறுந காலந் தொகுந்தொற
மிகவ ளிக்கும் வினையினைக் கென்றனன். (௪௨)

எழு நாக்கொ ளெரியினை நோக்குபு
வாழி வேண்டிட நோறும் வகைப்பல
கேழின் மிக்க சுவையிற் செழுமுனை
யூழி னுக்குந தொழிலுனக் கென்றனன். (௪௩)

அனில கேட்டி யனகன் சினகரம்
புனித வீதிக ளாதிய பூவெலா
மினிய கண்ணடி யென்ன விளக்குமவ்
வினைப ரிக்குதி யென்று விளம்பினான். (௪௪)

வருண வாதனச சோதனி மாண்பணி
புரியி டந்தொறும் பூம்புன றாம்பணி
மருவ மூக்கின் மெழுக்கு மலர்பணி
யுரிய வுன்றனக் கென்றன னும்பர்கோன். (௪௫)

நிருதி யீண்டு சருத ரசுரர்கள்
பெரிய பூதர்முற் பேத வகையினோர்
புரியுந தீவினை யாண்டும் புகாதுசின்
றரிதி னோம்பனிற் காமென் றறைந்தனன். (௪௬)

நடுவ கேள்வரு நாற்புறத் தோர்களு
மிடைநெ ருக்கை நடுவின் விலக்கிநின்
றிடரு றுநெறி செல்ல வியக்குகோ
லுடைய கைத்தொழி னிற்கென் றுரைத்தனன். (௪௭)

கோதி லுற்சவங் கொண்டருண் மண்டபத்
தாதி வீதி யெழுச்சியி லண்மினின்
றோது கோற்றொழி லாற்று முரிமைகிற்
கேத கும்பணி யீசகொள் கென்றனன். (சஅ)

ஏற்ற வேற்ற பணிக ளியம்புபு
சாற்று சோதிடர் யார்க்குந் தனிக்குரு
போற்று தன்குரு வாம்பொன் னவன்மலர்க்
காற்று ணைக்க ணமர்ந்து கழறுவான். (சகூ)

ஐய மந்திர நாத னருள்விழாச்
செய்ய லாந்தின மோரை சிறப்புற
வுய்ய வோர்ந்துரைத் தாள்கென வோர்ந்தவம்
மெய்ய ஞானியென் றோதினன் மேதக. (ருo)

நாளை யென்று தொடங்க நலந்தரு
நாளை யோதிய நற்றவர்ப் போற்றியந்
நாளை யேதன் னவையொழித் தின்புறு
* னாளை யென்று நயந்தன னாகர்கோன். (ருக)

வேறு.

தந்திர நாதன் வேத தத்துவப் பொருளாய் நின்ற
மந்திர நாதன் செய்ய மகோற்சவத் திருநா ளிந்நாள்
வந்திர வகற்று காட்சி மனம்விழி குளிர்ப்பக் காண்கென்
றிந்திரன் முடங்க றீட்டி யெங்கணு மினிதுய்த் தானால். (ருஉ)

உய்த்திடு முடங்கல் கண்டா ரோய்வென மண்ணோர் விண்ணோர்
பத்தியி னிறைஞ்சி யேற்றப் பணிமலர் தாய்ப்பூ சித்தா
ரித்திசை யன்றே சீர்த்த தெத்திசை களினு மென்னா
வத்திகழ் சூத கான மடுத்துநாற் றிசையுஞ் சூழ்ந்தார். (ருங)

புல்லொடுஞ் சமிதை யோடு நூலொடும் போது வாரு
மில்லொடும் வேள்வித் தீக்கை யியைபொடு மேகு வாருஞ்
சொல்லொடு தோய்கா னின்று தவத்தொடுஞ் செல்லுவாருங்
சல்லொடு தோய்ந்த வாசக் கந்தொடுங் கமனிப் பாரும். (ருச)

சமையம்வாய்ப் புறப்பெற் றெம்மா றகும்பணி செய்கிற் பாரு
மமைவிசே டாதி வாய்ப்புற் றகம்புறத் தருச்சிப் பாருங்
கமைநடச் சிலம்பி னோசை கண்டுகேட் டுருக்கொள் வாருந்
தமையுணர்ந் தமைந்து சார்ந்து தாமிரண் டறவாழ் வாரும். (ருரு)

* ஐ-சாரியை

அனுமதிபெற் றகமதியா லதைராச வனுஞையெனும்
வினைவிளக்கி யோதியுணர் வேதியர்தம் மனுஞையும்பெற்
றனையருளு மருடேச னிமாசலபூ சனைசிறப்ப
வினிதுபுரிந் ததிர்வேண்ட லெனுந்தேவா னுஞைபெற்றார். (௮௦)

அக்கடவுண் மாமறையோ ரனையமகோற் சவமிடையோர்
விக்கினமு முறுதினிது வேண்டியவா முடித்தருள்வான்
மிக்கமறை முதற்பொருளாம் விநாயகனை விதிமுறையாற்
பொக்கமிலாப் பேரன்பாற் பூசித்தா ரருள்பெற்றார். (௮௧)

பின்னனைய விழாவினுக்காம் பெருநிதியந் தாய்தாக
வன்னதனர்ச் சனைபுண்ணி யாகவா சனமாகி
முன்னருளுற் றினர்வாத்து சாந்திவினை முறைபுரிந்தார்
தன்னிகர்மா மறைபரவுந் தனிவில்வ தருமூலம். (௮௨)

தனிலமுத நாதனிரு தனையரொடு மிடத்தமர்ந்த
வனிதையொடும் பிதாவிருகால் வாங்கியவோர் காலினொடும்
புனிதவயிற் றேவினொடும் புடைசூழ்பல் வரிசையொடு
மினிதினெழுந் தருளிவீற் றிருந்தருளப் புரிந்ததற்பின். (௮௩)

விதிமுறையிற் பூசனையவ் விருக்கமூ லத்தியற்றித்
துதிசெய்திருத் திகையதன்பாற் றெட்டெடுத்துப் பட்டடுத்த
கதிர்மணிசூழ் பொற்கலத்திற் கைக்கொண்டு பக்கமுறப்
புதியமதி வேணியொடும் பொற்கோயில் புக்காரால். (௮௪)

இன்னமுறை யேமிருச்சங் கிரகணமாங் கியற்றியபின்
னன்னமிருத் திகைமுக்கூ றுக்கியவை யொவ்வொர்வகைச
சொன்னமுளைப் பாலிகையிற் றாயேற்றின் றுவசமொடு
மன்னுவிழாத் தீர்த்தமென்மூ வகைக்குரித்தா முளைதெளித்தார். (௮௫)

இவ்வகைசெய் தங்குரார்ப் பணமிரட்சா பந்தனமீற்
றெவ்வமறப் புரிந்துவிடை யெழுதுபடம் பூசித்துத்
தவ்விறுவ சாதிவா சனப்பேரி தாடனமுற்
கைவருபல் வினைகளுமக் கரிசறுமெல் லியின்முடித்தார். (௮௬)

எண்டிசைகா வலர்களுமாங் கிருந்தொண்டு புரிந்துறினும்
பண்டிசைநூல் வழாதுதிசா பந்தனமம் முறையியற்றி
வண்டருமக் கிராமதே வார்ச்சனமு மாபியற்றித்
தொண்டர்மகிழ் தாவிமயத் தோகையொடு மருடேசன். (௮௭)

தனக்கினிய விசேடபூ சனையாற்றி மகிழ்ந்தேத்தி
மனக்கினிய வருடருசோ மாக்கந்தர் தமைத்தொண்ட
ரினக்கினிய மண்டபத்தி னெழுந்தருளவித் தெதிர்மரபின்
வனக்கினிய மால்விடைமுன் வரைந்தபடந் தூக்குயர்த்தார். (அஅ)

ஓதுமுறை மாதுவசா ரோகணமீ தாற்றியுடன்
மேதகவெண் கொடிகளினுங் கிடையுயர்த்தாங் குடன்யாக
வேதிதிகழ் சாலைபுகூஉ மேவுபரி வாரமுடன்
மேதகுயா கேசகடம் விதிமுறைபூ சனையாற்றி. (அகூ)

கோதான விலக்கிநவ குண்டமுற முறையங்கி
யாதான முதலான வாற்றியா குதிகளெலா
மீதானம் புரிந்தீண்டிவ் விதத்தங்கி விளைந்தழ
மாதான மமர்ந்தருள்சோ மாக்கந்தர் திருமுனரீஇ. (கூ0)

அளிபெருக நனிசிறப்பி னமர்தருபூ சனையாற்றிக்
களிபெருக வாந்தோளி கவினவிரண் டணிந்தவாற்றி
னொளிபெருக வெம்பெருமா னென்றினுமை யொன்றிவர்ந்து
தளிபெருக வலம்போந்து தகவின்யாக சாலைதனில். (கூக)

எழுந்தருளி வந்தணைய விருஞ்சாலை யபிமுகமாய்த்
தழுந்தகைய பசுபதியோர் தான்பூர்வ முகத்தருளே
பொழிந்தருளி நன்றருளப் புரிந்துயகம் பூர்த்தியுற
மொழிந்தமுறை பூர்ணா குதியினிது முடித்ததன்பின். (கூஉ)

அன்னமகச் சாலைநடு வமர்ந்துயர்ந்த வேதிகையின்
மன்னுமுத னாதனிடம் வளர்பெரிய நாயகிதந்
சொன்னகடத் திருப்பூசை தொடரவிரு பாரசரினு
நன்னர்மகா தீபாதி நலம்பெருகு முறைபுரிந்தார். (கூங)

சான்றசிவத் துவிசரிவர் சம்பகும்ப விம்பமொனு
மூன்றினுமிம் முறைபூசை முடித்திடவத் திருக்காட்சி
யேன்றுலகுக் களித்தவணின் றெழுந்தருளி யெம்பெருமா
ஞன்றதிரு வீதியெலம் மனைவியொடு முலாத்தருவான். (கூச)

பானுமதி யெனுமிருவர் பல்லுருக்கொண் டெம்பெருமாற்
கானபணி புரிந்துய்வா னடுத்திருபால் வாலேய்ப்ப
மேனிமிர்வுற் றவிர்செம்மை வெண்மையன விரிகவிகைக்
கானிரை நிரையாகக் கவிந்துநிழ னனிபரப்ப. (கூரு)

ஒருபாறன் பாலாக வுமைகவர்ந்தா டவம்புரிந்தா
ளிருபாலும் பெறப்பணியீண் டியற்றுவலென் றடுத்தனள்பல்
லுருவாகிக் கங்கைதன தொண்டிரைவீ சுறுசெயல்போற்
றருவான மகளிர்பலர் சாமரைகள் புடையிரட்ட. (௯௬)

பின்புதமை மடிக்கிடத்திப் பெருநசானைச் சிறுகால்செய்
தின்புதவு மம்மையபாக் கீண்டிதுசெய் திடன்முறையென்
றன்புதரு தொண்டர்பல வருஞ்செயல்வீ சனங்கொண்டு
முன்புதனித் தனிவிசிறு முழுமணக்கான் முகமடுப்ப. (௯௭)

தொடர்பிருபா லாலவட்டஞ் சுருட்டிகிரை யாதிசெல
மிடையுநெருக் கொதுக்குமுடி விடையொளிர்பொற் சோலுலவ
விடியகல்வான் பறந்தோடு மியலிருபுள் ளிவைமுதல
கொடிகடமக் கோராசாயக் குலவுவிடைக் கொடிமுனுற. (௯௮)

யாமிதுகா றந்தோநம் மிருநடனத் திறனோரா
வூமர்மூன நடித்தலுத்தோ மோதுநட விகற்பமெலா
மேமுறவோர்த் திடுமெம்மா னிதுவன்றே பெரும்பேறென்
றுமகல்வா னரமகளி ராங்கனெதிர் நடித்துவர. (௯௯)

நாதமெலா மொடுங்குழிமுன் னண்ணியவா பின்புபல
பேதமுற விறைவன்முனம் பெருகவிரிந் தெழுவவென
வேதவொலி தமிழ்வேத மிக்கவொலி தொக்கபல
கீதவொலி பல்லியத்தின் கிளரொலிகள் வளர்ந்துவர. (௧௦௦)

இருபாலு மெசுர்வேத மெடுத்தோது மிசைபெருக
மருவாகின் றேனையமா மறையொலிபின் மல்கிவரத்
தருவாய்மைத் தமிழ்வேதஞ் சந்தியின் மன்னிவர
வொருவாத சிவநாம கீர்த்தனத்தி னோசையெழ. (௧௦௧)

வீணைமுதற் றந்திரிகண் மேயபல் கருவியிசை
காணமர்வேய்ங் குழலாதி துளைவகைய கருவியிசை
யேணமர்தோற் கருவியிசை யியைதருதா ளத்தினிசை
கோணரிதாய் மிடற்றெழுந்து குலவுமிசைக் குலம்பெருக. (௧௦௨)

வந்தியர்மா கதர்சூதர் மலிதருமங் கலம்வீரம்
பந்தியமா புகழ்முறையே பண்புறகின் றெதிர்பாட
முந்தியசீர்ப் பாவாணர் முதிர்சுவைநாற் கவிசூட
விந்தியநீத் தவர்போற்று மிருந்துதிபற் பலகூட. (௧௦௩)

குருக்கொண்ட மதிமௌலிக் குழகனருட் டூவெள்ள
முருக்கொண்டந் நிறம்பொலிந்தெவ் வுயிர்களுமளித் துறல்போலத்
திருத்தொண்டர் திருமேனித் திருவெண்ணீற் றொளிபரவக்
கருத்தொன்று மாவோசை கண்மலர்நீர்த் திரைவிரவ. (௧0௫)

திருவருளி னடங்கியலர் சிந்தைதெளிந் தன்புருகுந்
தாரிருமெய யடியர்சிவ தசபுரா ணத்தீடைவின்
வருமரிய பெருமகிமை வகைகளியு வகைசிறப்பப்
பரவிவினை யுநர்களிப்பப் பரிவினெடுத் தோதிவர. (௧0௬)

விண்மாரி யெனப்பொழியும் விழிமாரி யன்பர்தருங
கண்மாரி சொரிவிரைப்பூங் கவின்மாரி சிவஞான
வண்மாரி தருதமிழ்மா மறைமாரி யுடன்பதினெண்
பண்மாரி முதலாய பலமாரி நலம்பெருக. (௧0௭)

எமதுரிய மேகாச மெனவகித்து சிறப்பளித்தோ
னெமையருளு மெனவடுத்தாங் கிமைந்து முன்போதக்
கமைதருமா மறைபரியாக் காதலித்தா னுதலிறை
னமையருள்வா னெனப்பரிக ணடம்புரிந்தங் குடன்போத. (௧0௮)

இவனெனுநா மந்தனக்கே யுரியனென மறைதெளித்த
திவியதமிழ்ச் சுருதிபுகல் செழும்பொருளோர் தேற்றுதல்போற்
சுவணகட முதற்றேவ மங்கலமாந் தொகையெட்டு
மவிரிழைவான் மடவார்க ளணித்தாக வெடுத்தேக. (௧0௯)

என்னனவோ தாதுமெல்லா முடையபிரான் றிருவெழுச்சிக்
கின்னணமற் றென்னவுமாங் கெய்தவலர் மணிமறுகின்
முன்னவன்மா தேவனிறை முக்கணன்வந் தானென்று
சின்னமெலா மெடுத்தோதத் திருவுலாப் புறம்போந்தான். (௧௧0)

திருக்கோயின் முன்போந்து தேவரினை ரெடுத்தேந்துங்
கருப்பூரச சுடர்முதல கவினுறமும் முறைசூழத
தருக்காதி சைவர்செய்பூ சனையேற்றுட் சென்றருளி
விருப்புரு மணியணைமேல் வீற்றிருந்தா னமுதேசன். (௧௧௧)

இம்முறைநா ளேற்றற விருஞ்சிறப்பு நனியேற
வம்மலிரு பொழுதுமெழுந் தருள்பவனி யெவரிசைப்பார்
நம்மையரு ளனைபெரிய நாயகியோ டமுதேசன்
மும்மையுமா குயவூரு முறையூர்தி வகைமொழிவாம். (௧௧௨)

வேறு.

பின்னர் வழிநாட் காலையிலெம் பிராட்டி யோடு மாந்தோளி
தன்னி லிறைவ னுலாக்காட்சி தந்தந் நாளின் மாலையினிற்
பன்னவரிய நித்திலப்பூம் பந்தர் நிழற்கீ ழுறுதேசன்
மன்னு காழி மணியெழுச்சி மாண்பு நினைப்பித் துலாப்போந்தான். (ககஉ)

மூன்று நாளிற் காலையுலா முன்னை முறைபோந் தன்றிரவிற்
றோன்றூழ்ந் தல்குற குடைந்தபணி தன்னைச் சுமப்ப வுமைபோதக்
கோன்று னிவண்சார் பிரிவாற்றுக் குணத்தி னடைந்து தரித்தெனச்
சான்றோர் பரவு கயிலாயத் தனிவா கனமெம் பிரானூர்ந்தான். (ககங)

*வருநான் கெனுநாட் காலையுலா மரபிற் போந்தவ் விரவினடை
தெருளோ திமமூர்ந் துமைபோதத் திகழ்சே வடிமூன் முடிசூட்டும்
பெருவாழ் வினுமீ ததிகமெனப் பேணு நந்தி மிசையவற்குப்
பொருவா முன்னூற் சிவஞான போத மளித்தோ னுலாப்போந்தான்.(ககச)

ஐந்தென் றிடுநாட் காலையுலா வடைவிற் போந்த நிசிகரத்து
கந்தின் சொல்லா முதருத்து கருணைக் கிதுகைம் மாறெனல்போன்
முந்துங் கிளியூர் தரவுமையெம் முதல்வன் கணேச னெனற்கிசைய
வுந்தும் பூதந் தனைவசந்த விழாக்கொண் டூர்ந்தா னும்பர்பிரான். (ககரு)

இருமூன் றெனுநாட் காலையுலா வெழிலார் தரப்போந் தந்நிசியெம்
பெருமான் றனையூ டலின்வெவ் வுழ் பெற்றி புறத்துந் தெரிப்பதென
வரியூர்ந் துமைபோ தரவெம்மா னயிரா வணமூர்ந் ததுகயிலைக்
கிரியூர் பட்ட வர்த்தனமாங் கிழமை தெரித்தாங் குலாப்போந்தான். (ககசு)

அறமே வேழா நாட்காலை யருமை யுலாப்போந் தன்றிரவி
லறமே யுருவா யென்றும்வள ரறமே புரிவா ளதுதெரித்தாங்
கறமே யுருவாம் விடையூர வண்ண லுருவிற் கலந்திடர்மூற்
றறமே வியதோர் தொடர்புணர்த்தாங் கருமால் விடையூர்ந் தருள்புரிந்தான்.

இருநான் கெனுநாட் காலையுலா விணங்கப் போந்தெவ் வுயிர்க்கு முணு
வொருவா தூட்டி வளர்க்குமுயிர்த் தாய்தானென்ப துணர்த்தாங்குத்
திருவார் காம தேனுவுமை செலுத்த மால்பின் னவதாரத்
துருவா யருள்வேட் டிவண்மேற்கொண் டேற்று னெனப்பாய் மாவூர்ந்தான்.

ஒன்பா னுளி னுமையொருசோட் டும்பன் மயிர்சேய் சண்டேச
னென்பா ரொவ்வோர் மாமணித்தே ரிவர்ந்து திருமா மணிமறுகி
லன்பா லுடன்போ தரவெம்மா னமுத நாத னணிமணித்தே
ரின்பா லூர்ந்தாங் கருட்கோலத் தெழிலார் காட்சி யினிதளித்தான். (கககூ).

ஒருபா னளிற் சிறுகாலை யுடையா னுடையா ளுடன்காட்சி
தருவாழ் வருளி யுவந்துதனித் தனிவெள் விடைமே னிருமலமாந்
தெருண்மா தீர்த்தந் தனிற்போந்து தீர்த்தங் கொடுத்தாங் குலகமெலாம்
பெருவாழ்வளித்தாங்கருள்வெள்ளப்பெருநீர்தோய்ந்தின்புறப் புரிந்தான். ()

பின்னர் யாக விசர்ச்சனநூல் பிறங்க வாற்றி யாகேச
சொன்ன கடநீ ரமுதேச ஈயம்பு பூர்த்திக் கபிடேக
நன்ன ரியற்றி விசேடார்ச்ச னைமுன் புரிந்தவ் வமுதேசன்
முன்னர் விடைமான் கொடியிறக்கி முதமீக் கூர்ந்தார் சிவத்துவிசர். (கஉக)

ஈற்றிற் புரிசண் டேசவிழா விலங்கப் புரிந்தா ரெண்டிசையும்
போற்றுபால ரங்கு ரங்கள் புனைந்த விரட்சை விசர்ச்சனங்க
ளாற்றிற் புரிந்தா ரமுதேச னன்னை பெரிய நாயகிதன்
சாற்று கலியா ணோற்சவமுந் தயங்க மரபின் முறைபுரிந்தார். (கஉஉ)

வருநா டோறுந் தனிவசந்த மணிமண் டபத்தில் வீற்றிருந்து
திருவார் விழாக்கொண் டருளியவச் சிறப்பி னனந்த மடங்கின்னுட்
பெருகா நற்பப் புதுநீர்சூழ் பிறங்க யாத்து நறுமலர்பெய்
தொருவா நாப்பண் மணிபீடத் துமையோ டுமையா ளமுதேசன். (கஉ௩)

தனக்கு நபன கும்பாதி தாபித் தருச்சித் துமரபின்
மனக்கொண் டினிய வபிடேக வகைகள் பெருக நனிபுரிந்தோ
தனக்கு வால்வர்க் காதிசைவே தனமா பூசைச் சிறப்பியற்றி
மனக்கு மகிழ்கூர் விடாயாற்று மாண்பின் விழாச்சீர் வயக்கினார். (கஉ௪)

உடனுங் கெழுந்துட் சூழன்முத லோரைந் தாவ ரணங்களினும்
புடைமா மறைதே வாரசிவ புராண திருத்த வாத்தியங்க
ளிடனீ ளோதை யோரொன்று யிலங்கி முறையே தொடர்ந்துவர
நடநா யகன்சூழ் போந்திருக்கை நணிவீற் றிருக்கு நலம்புரிந்தார். (கஉரு)

சாற்று மிவ்வா றமுதேசன் சைத்தி ரோற்ச வஞ்சிறப்ப
வாற்றின் முடித்த சிவத்துவிச ரலிர்வெண் பூதி பிரசாதம்
போற்று வலாரிக் களித்தாசி புகன்றிவ் வரிய பெரும்பயனீ
யேற்று வாழ்கென் றுபசரித்தா ரிறைஞ்சியேற்றங் குடல்பொடித்தான்.

பின்ன ரனைய சிவத்துவிசப் பெரியர்க் கரிய வணியாதி
மன்ன வணிந்து மாபூசை வயக்கிச் சிவிகை களி னிவர்ந்தாங்
கன்னார் வீதி வலம்போந்தாங் கமரா சிரியோற் சவமுறையே
நன்ன ரியற்றி யடியுறைக ணயப்ப நனிதங் களமகிழ்ந்தான். (கஉஎ)

அடைந்து நெகிழ்ந்து நெகிழ்ந்துருகு மன்பு பெருக வருள்வெள்ளங்
குடைந்து பணிந்தாங் கமுதேசன் குளிர்தா மரைச்சே வடிநிழற்கீழ்
மிடைந்து தனிவீற் றிருக்குமன மீட்க லாற்றான் புறவிடைபெற்
றடைந்து வினைநீங் கியமகவா னும்பரோடு மும்ப ருற்றான். (கஉஅ)

என்னை யுரைத்தாஞ் சூதவனத் தெய்தி யுய்ந்தார் பெருந்தொகையோ
ரன்னை யினும்பே ரருளுடையா னமுத நாத னடைந்தளவே
முன்னை வினைநீத் தருள்வகைகண் முற்று முகம்பற் பலகோடி
தன்னை நிலைசெய் துளைப்பினுமச் சேடன் றனக்குஞ் சாற்றரிதே. ()

மலர்மெய்ஞ் ஞான சனற்குமா ரமைந்த வினிநாம் விரிப்பதையென்
னுலகி னுயிர்க டிருவருள்பெற் றுயமெய்ந் நூல்சொல் சாதனம்பற்
பலவன் னவையா வருக்குமுறை பயிற்ற வருமையவைக்கெல் லாந்
இலக மியற்றற் கிலகு நிதி சிவபுராண சிரவணமே. (கங0)

சிவபு ராண சிரவணமே தெள்நூல் பலசொல் லறங்க ளெல்லாஞ்
சிவபு ராண சிரவணமே சேர்க்குஞ் செல்வத் திறங்களெல்லாஞ்
சிவபு ராண சிரவணமே சேர்க்கு மனைநன் மக்களெல்லாஞ்
சிவபு ராண சிரவணமே சேர்க்கும் பலவா மின்பமெல்லாம். (கங-க)

சிவபு ராண சிரவணமே சித்த சுத்தி முதலளிப்ப
சிவபு ராண சிரவணமே செறியும் மலத்தைத் தெறவல் லதுவே
சிவபு ராண சிரவணமே சீவ குணநீத் தளிப்பதுவே
சிவபு ராண சிரவணமே திகழ்பே ரின்ப மருள்வதுவே. (கங-உ)

அன முறையா லவற்றிடைமிக் கருமை திகழிச் சூதவன
மேன புராண முழுதேனு மேவு சருக்க மொன்றேனு
மான கவிகள் பலசிலவு மற்றொன் றேனு நியதிபெற
ஞான முறவோ துதல்கேட்ட னயக்கு மவரே பிறந்தவராம். (கங-ங)

இன்ன சூத வனக்காதை யெழுது மவரோ டந்தவர்மேற்
பன்னு முதவி புரிந்தவர்சீர் பரவு மவர்பூ சித்திடுவார்
சொன்ன முறையிற் பதிட்டைபுரி தூயர் முதலோ ரமுதேசன்
றன்ன தருளா னினைத்தவெலாஞ் சார்ந்து வாழ்வார் சரதமிதே. (கங-ச)

என்றாங் கெமையா ணந்திமுடிக் கிசைத்த முறையா லெழுவேட்கை
குன்றா தெனினுந் திருவிளையாக் கலியைக் கடந்து மேற்கூற
னன்றா காதென் றமைந்திருந்தா னான்கு முகன்சே யெனச்சூத
னன்றா தரித்த முனிகுலத்துக் கறைந்தா னுணைக் கமைந்தாரால். ()

வேதம் வாழி முகில் வாழி விளைகூழ் வாழி யுயிர்க்கின்ப
கீதம் வாழி திருத்தொண்டர் செல்வர் வாழி பூதிமுதற்
சாதம் வாழி சித்தாந்த சைவம் வாழி யருளமுத
நாதன் வாழி யனைபெரிய நங்கை வாழி வாழியவே. (௧௫௬)

இந்திரன்றிருவிழாச்சருக்கமுற்றிற்று.

சூதவனபுராணம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௲௫௱௨0.

உ

சிவமயம்.

# சூதவனபுராணவசனம்.

## பாயிரம்.

சுத்தசாட்குண்ணிய பரிபூரண பரமபதியாகிய சிவபெருமான், உலகர் யாவரும் வேதார்த்தங்களை ஒன்றொன்றாக ஆராய்ந்து *நேதிகளைந்து அவற்றுளே இது உபசாரம் இது உண்மையென்றுள்ளபடி தெளிந்து, அத்தெளிவினால் மலைவில்லாத பதிப்பொருள் ஒன்றே; அது இலைமறைகாய்போல் வேதத்துள்ளே விளங்குவதாம்; அப்பதி உமாபதியேயாம். இதுவே எவ்வாற்றானும் நிச்சயமென்று தேர்ந்துகொள்ளுதல் மிகவும் அரிதாதலால், அந்தவேதத்தினுட்பொருளை அவ்வுலகர்யாவரும் எளிதினுணர்ந்துய்க வென்னுந்திருவுளப்பெருங்கருணையினாலே வெளியிட்டருளிய புராணங்கள் பதினெட்டாகும்; அவற்றுள்ளே அக்கினிபுராணம் ஒன்று, சூரியபுராணம் ஒன்று, பிரமபுராணம் இரண்டு, விஷ்ணுபுராணம் நான்கு, சிவபுராணம் பத்தாகும். அச்சிவபுராணங்களுளொன்றாகிய பௌஷ்யோத்தரபுராணத்திலே க்ஷேத்திரகண்டத்திலே ஸ்ரீபிரகந்நாயகிசமேதஸ்ரீமந்திரேஸ்வரஸ்வாமி அநவரத சாந்நித்தியராய் வீற்றிருந்தருளுகின்ற திருவுசாத்தானமாகிய சூதவனஸ்தல மான்மியம் விளங்குகின்றது.

இதைச், சிவபிரான் உமாதேவியார்க்குபதேசிக்கும்போது, அவர்மடிமீது வீற்றிருந்துகேட்டருளியஸ்ரீசுப்பிரமணியப்பெருமான் நந்திதேவர்க் குபதேசித்தருள, அவர் சனற்குமாரருக்கு, அவர் வியாசமுனிவருக்கு, அவர் எனக்குபதேசித்தருளினரென்று சூதமுனிவர் சொல்லிய இச்சூதவனமான்மியமாகிய வடமொழியைத் தமிழ்நிலத்தாருணர்ந்துய்யும்பொருட்டுத், தமிழ்மொழிபெயர்த்துத்தருகவென்று அச்சூதவனத்தின் கீழ்பால் ஒருகுரோசத்தி குணங்க ஆலங்காட்டிலே, பூவைசியர்குலத்திலே, கொடை நடையாதியுத்தமகுணயுக்தத்து, ளானிறைந்த † இராமநாதச் செட்டியார் செய்த அருந்தவப்பயனப் பொருள்

---

* நேதி - ந - இதி எனப்பிரிபட்டு, "அல்ல என்று" எனப் பதியிலக்கணை படும் வடமொழி. எனவே வேதப்பொருள்களை ஆராயுங்கால் வென்றுநீக்கி என்பவைகள் அமையப்பெறுதனவற்றை இது பதிப்பொருளல்லவெனக்கள குணங்களுமாம். மூகாம். பதியிலக்கணங்கள் அநாதிபோதாதி அஷ்டகுண, மாதமெனினும்

† இவரை ராமசாமிச்செட்டியாரென்றும் வழங்கு சாமியெனினும் பொருளொன்றே.

உத்தமோத்தம சத்துவகுணவிசேஷ சிவநியமாநுஷ்டான சிவாநுக்கிரக சம்பந்த சிவபூஜாதுரந்தரராய்ப்பிரசித்திபெற்று விளங்குகின்ற ஸ்ரீமாந்-சிதம்பரச்செட்டியார் கேட்ப, அதனைமறுக்கமாட்டாமையால், அன்பும் அறிவுஞ் சிறிதுமில்லேனாயினும் மெய்யன்பர்கள் எண்ணியகாரியம் இனிது முடித்தருளுங் கிருபாவள்ளலாகிய சிவபிரான், அம்மெய்யன்பர் பொருட்டு இதனை இனிதுமுடித்தருளுவாரென்று துணிந்து ஸ்ரீசாம்பசிவகுரவசரணாரவிந்தங்களை வணங்கித் திருவருளைவேண்டி அதனுள் அடங்கிநின்று தமிழ்மொழிபெயர்த்து ஆயிரத்தைஞ்ஞூற்றிருபது திருவிருத்தங்களாகச் செய்தமைத்தேன்.

## அவையடக்கம்.

சொற்பொருளெல்லாம் சத்தி சிவரூபமேயென்பது சர்வாங்கீகாரம். ஆதலால், இப்புராணச் சொற்பொருள்களைச் சத்துவகுண விசிஷ்டர்களாகிய சாதுக்கள் சத்தி சிவரூபமாகவேகருதி அவற்றாற்சிவசரித்திரமகிமையைத் தெளிந்து சத்துவப்பயனைப் பெறுவார்கள். மற்றையோர் யாதுகாரணத்தாலாயினும் அதை மறந்து குற்றம்நோக்குவாராயின அதற்குச்சமாதானஞ்சொல்லுதல் பரதந்திர வழிப்பட்டோமது கடமையன்று. அன்றியும் சமஸ்தவாக்கியங்களும் சிவாஞ்ஞையாமென்றி[illegible]ன்று பெரியோர் சொல்லுதலால் இப்புராணச்செய்யுட்கள் யான் செய்ததாக நினைத்துக் குணவான்கள் குற்றஞ்சொல்லார்கள். அப்படியன்றி என்வாக்கென்றேபிறர் கூறினும் அக்கூற்றுடையார் இக்கவிகளிற்குற்றம்பார்க்கின் அது அவர்க்கேபழிப்பாகும். என்னை? நானேனென்றால் இறைவனாற் குற்றங்களெல்லாவற்றையும் நிறைத்துவைக்கப்பெற்ற அநேககளஞ்சியங்களை ஏகாத்துள்ளேன். குற்றமேவடிவாகிய என்னிடத்து முற்றுங் குற்றமேயன்றி வேறு தோன்றாவாகலின்.

---

## புராண வரலாறு.

உலகெலாம்புகழ்கின்ற சத்துவகுண விசிஷ்ட புண்ணியபூமியாகிய நைமிசாரணியத்திலே முன்னொருகாலத்திலே, சௌனகர் முதலிய முனிவர்கள் சத்திரயாகஞ்செய்து வந்தார்கள். அப்போது சூதமுனிவர் சுவேச்சையாக அங்குவந்தார். முனிவர் யாவரும் இருக்கைவிட்டெழுந்து, கரஞ்சிரமேற்குவிய எதிர்சென்று உபசரித்து அழைத்துவந்து ஆசனத்திருத்திப்பூசித்து நின்று முனிவர் பெருமானே! அடியேங்களுக்கு அநேகமுறை கருணைகூர்ந்து சிவபுராணாமிர்தம் புகட்டினீர்கள். சிறிதுந்தெவிட்டிலது; முன் சிவக்ஷேத்திர மகிமைகள் உபதேசித்துவருங்கால் சூதவனமென்றொரு உத்தம ஸ்தலம் உள்ளது, அது எத்தலத்திலுஞ்சிறந்தது, அத்தலத்தில் வீற்றிரு

